# மூன்றாந் திருவாய்மொழி.

ஆ—(வெள்ளைச்சுரிசங்கு) இப்பிராட்டியோடே பெரியபெருமாள் ஸம்ஶ்லேஷரஸத்தை யநுபவித்து அந்த ஸம்ஶ்லேஷரஸமுள்ளடங்காதபடி பெருகினவாறே அதுஸாத்மிக்கைக்காகவு மாஶ்ரிதரக்ஷணத்துக்கு ஶ்ரமஶ்ரம பாஸமாகவுந் தென்திருப்பேரையிலே எழுந்தருளத்திருவுள்ளத்தே கோலியருளி இவளுடைய ஸம்வாதாஸஹமாக விவளிடத்திலே கபடாஸ்ரநத்தைப்பண்ணியருளி தென்திருப்பேரையிலே வேட்டைக்குப்போய்வருகிறோமென்றருளிச்செய்ய, இப்படி பதிவ்ரதையான இவளவ்யுத்பந்நவிஶ்லேஷையாகையாலு மிவனெழுந்தருளுகை யிவனைக்காணாதொழிகைக்கு ஹேதுவென்னுமிட மறியாமையாலு மெழுந்தருள ஸம்மதித்து விஜயத்தைப்பராஶாஸித்து திவ்யாயுதங்களைக்கொடுத்தருளி "ஶ்ரீஆரூஹநாமோ ராஜ ஸௌஹா நுவிஷ்யாஹி" என்னும் ஸூக்தியையாலே திருப்பல்லாண்டுபாடிக்கொண்டு திருவணுக்கன் திருவாசலளவும் பின்னேயெழுந்தருளப் பெரியதிருவடி திருத்தோளிலேயேறியருளி தாமரைத்தடாகம் மலர்ந்தாப்போலேயிருந்த திருக்கண்களாலே யிவளைப்புரிந்துபார்த்தருளி இவளாலேயநுஜ்ஞாதனாய்த் தென்திருப்பேரையிலேயெழுந்தருள, இவளவனைக்காணாமையாலே கத்யுத்ஸவஸ்லேஷையாய் அவனெழுந்தருளியிருந்த தென்திருப்பேரையிலேயெழுந்தருள வுத்யோகிக்க இவளுடைய திருத்தாயாரும் தோழிமாரும் மற்றுமுள்ள ஸம்பந்துக்களு மிவளை ரக்ஷிக்கவாயிக்க நான்போகைதவிரேன், தனியேபோனாளென்னும் பழியுங்களுக்கு வாராமே

---

## மூன்றாந்திருவாய்மொழி.

இ — கீழ்ப்பாட்டில்சொன்னபடியே ஆழ்வார் பெரியபெருமாளோடே ஸநஸ்ஸம்ஶ்லேஷவிஶேஷத்தைப்பெற்று ஸந்தோஷராயிருக்க விஶ்லேஷதஶையில்போலே இத்திருவாய்மொழியிலே விரஹிணியான வொருபிராட்டியினுடைய பேச்சுக்களைப்பேசுகை யஸம்கதமன்றோவென்ன? இப்போதிவர் ஸநஸாநுபவவிஶேஷஸத்தாலே ஸம்ஶ்லேஷஸந்தோஷராயிருந்தாரேயாகிலும் பாஹ்யஸம்ஶ்லேஷங்கிடையாமையாலே பின்னையுமவஸாராய் இப்போதவனோடு பாஹ்யஸம்ஶ்லேஷம்பெறவேணுமென்று கலசெப்படுகிற தம்முடையதஶையை பெரியபெருமாளோடு ஸம்ஶ்லேஷித்துப்பிரிந்து விரஹாமிதையான வொருபிராட்டியானவள் தான் திருப்பேரையில் செல்லவேணுமென்று அன்னைமாரையும் தோழிமாரையுங்குறித்துச்சொல்லுகிற வாக்யாவஸ்தைஶத்தாலே பேசுகிறாரென்கிற கருத்தாலே யவதரிப்பிக்கிறார் (இப்பிராட்டியோடே ஐத்யாதியால்) இப்படி ஸாவஸ்தைஶத்திலே இத்திருவாய்மொழி ஸம்கதமானாலும் கந்யாவஸ்தைஶத்திலே பெரியபெருமாளோடு ஸம்ஶ்லேஷிக்கவேணுமென்று கீழ்த்திருவாய்மொழியிலே வ்யஸநப்பட்ட விப்பிராட்டி இத்திருவாய்மொழியிலே திருப்பேரையிலே செல்லவேணுமென்று பேசுகை யஸம்கதமன்றோவென்ன வருளிச்செய்கிறார் (அந்தஸம்ஶ்லேஷரஸமித்யாதியால்) இத்தலைஸம்ஶ்லேஷம் நடவாநிற்க இவளவன்விஶ்லேஷத்தை ஸம்மதிப்பளோ, இவள் ஸம்மதிக்கவில்லையாகில் அவனிவளை விஶ்லேஷித்துப்போகை யுசிதமோவென்னவருளிச்செய்கிறார் (இவளுடைய ஸம்வாதாஸஹமாகவித்யாதியால்) அவ்யுத்பந்நவிஶ்லேஷையாகையாலுமென்றது - ஸம்ஶ்லேஷரஸைகத்யாநுபவமாகையாலே விஶ்லேஷமின்னபடியிருக்குமென்று தெரியாதேபோம்படி அத்தை மறந்தவளாகையாலுமென்றபடி. (இவனெழுந்தருளுகையித்யாதி) இவன் திருப்பேரைக்கெழுந்தருளுகிறது இவனைக்காணாதேபோகுகைக்கு ஹேதுவென்னுமிடத்தை யறியமாட்டாதபடி கத்யுஸமஶ்லேஷையாகையாலுமென்றபடி. இவன் திருப்பேரைக்கெழுந்தருளுகிறதுவும் ஒருஸம்ஶ்லேஷவிஶேஷமென்றே எண்ணிக்கொண்டிருந்தாளென்றுகருத்து. இப்படி அவனைப்பிரிந்தவிவள் பண்டுதன்னோடு அவன் ஸம்ஶ்லேஷித்திருந்த தஶையிலுண்டான ஸவனுடையவழகுகளை நினைத்துச்சொல்லுமத்தனையொழிய ஸந்தோஷத்திலேயிருக்கிற தான் காணுதவனுடைய வ்யாபாரஸநாதங்களை வெள்ளைச்சுரிசங்கொடித்யாதியாலே யிவள் பேசக்கூடுமோவென்ன வருளிச்செய்கிறார் (விஜயத்தையித்யாதியால்) திவ்யாயுதங்களைக்கொடுத்தருளி என்கிறவிடத்திலே "ததஸ்ஸமஸ்ரூளதத்ணீய நாஷீவாயதேக்ஷணா । ததஸ்வீதாதயோஹ ஸாம்ரூதாஃ ஸஸ்ரூஸ்விஜேதூரு" என்கிறஶ்லோகமநுஸந்தேயம். திருவணுக்கன் திருவாசலளவுஞ்சென்று வ்யாபாரஸநாதங்களையெல்லாங் காண்கையாலே இவளவற்றைச் சொல்லக்கூடுமென்றதாய்த்து. புரிந்துபார்த்தருளி என்றது - திரும்பிப்பார்த்தருளினென்றபடி. *

மூ— வெள்ளைச்சுரிசங்கொடாழியேந்தித்தாமரைக்கண்ணனென்னெஞ்சினூடே* புள்ளைக்கடாகின்றவாற்றை
க்காணீரென்சொல்லிச்சொல்லுகேனன்னைமீர்காள்* வெள்ளச்சுகமவன்வீற்றிருந்தவேதவொலியும்விழா

ஆ— நீங்களேயென்னைத் தென்திருப்பேரையிலே யிண்டெனக்கொண்டுபோய்விடுங்கோளென்கிறாள். நிரதிசயௌஜ்ஜ்வல்ய விசிஷ்டமாய் நிஷ்களங்கமான சந்த்ரமண்டலம்போலேயிருந்த ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும், நிரதிசயதீப்தியுக்த ஸூர்யமண்டலம்போலேயிருந்த திருவாழியையுமேந்தி, பொன்மலையின்மீமிசைக் கார்முகில்போலே பெரியதிருவடி திருத்தோளிலேயேறியருளி இலங்கொளிசேரரவிந்தம்போன்ற நீண்டகண்களையுடையனானவ னென்னெஞ்சினூடே சாரிகைத்திரிந்தருளுகிறபடி நீங்கள் காண்கிறிலிகோள். இன்னபடியென்றெனக்குச் சொல்லநிலமாகிறதில்லை, ஆதலாலவனை யொருக்ஷணங்காணாதொழியில் தரிக்கமாட்டேன் வேதகோஷத்தாலும் உத்ஸவகோஷத்தாலும் ஸ்ரீமான்களான பாகவதர்களுடைய ஹரிநாமஸங்கீர்த்தனகோஷத்தாலும் விசிஷ்டமான திருப்பேரையிலே உத்ஸவஜநித நிரவதிகாநந்த

❋ முதற்பாட்டு ❋

இ— வெள்ளைச்சுரிசங்கொடு என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நிரதிசயௌஜ்ஜ்வல்யேத்யாதியால்) ஆழியேந்திஎன்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நிரதிசயதீப்தீத்யாதியால்) புள்ளைக்கடாகின்ற என்கிறவிடத்தி லபிப்ராயத்தை யருளிச்செய்கிறார் (பொன்மலையித்யாதியால்) மீமிசையென்றது - உபரி என்றபடி. கநகாசலோபரி காளமேகம்போலேஎன்றபடி. தாமரைக்கண்ணனென்கிறதற்கு திருமொழிப்பாசுரத்தாலே தாத்பர்யமருளிச்செய்கிறார் (இலங்கொளியித்யாதியால்) இலங்கொளி - விளங்காநிற்கிறகாந்தியானது, சேர் - சேர்ந்திருக்கிற, காந்திஸ்வரூபமாயிருக்கிற என்றபடி. அரவிந்தம்போன்ற - அரவிந்தஸத்ருசமான, புள்ளைக்கடாகின்றவாற்றைஎன்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (சாரிகையித்யாதியால்) என்சொல்லிச்சொல்லுகேனென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இன்னபடியித்யாதியால்) அந்வயார்த்தத்துக்குப் பரதாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆதலாலித்யாதியால்) வேதவொலியுமித்யாதி விளையாட்டொலியுமறாததுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (வேதவித்யாதியால்) ஸ்ரீமான்களானவென்கிறவிடத்திலே "பாகவதஸ்ரீமாநா ந்ருஹரீஸங்கீர்த்தனஸம்பத: । நாமஸங்கீர்த்தனபராஸ் ஸ்ரீவைஷ்ணவாஸ்ஸதா:" என்கிறஶ்லோகமநுஸந்தேயம். வெள்ளச்சுகமவன்வீற்றிருந்தஎன்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (உத்ஸ

ஸ— அன்னைமீர்காள்?- மாத்ருஜநங்காள், வெள்ளை - தவளமான, ஸ்யாமளமானதிருமேனிக்குப் பரபாகமாம்படி சுக்லவர்ணமான என்றபடி, சுரிசங்கொண்டு - சுரியையுடைத்தான ஸங்கத்தோடே, சுரி - சுழல், சுழித்துச்சுழிபோலே வக்ரமான சுந்தராவயவஸந்நிவேசவிசேஷத்தையுடைத்தான ஸ்ரீபாஞ்சஜந்யத்தோடேகூட என்றபடி. ஆழி - சக்ரத்தை, அப்படியொருவிசேஷண மிட்டுச்சொல்லவொண்ணாதபடி ஸர்வோத்தரமான ஸ்ரீஸுதர்சநத்தைஎன்றபடி. ஏந்தி - அவற்றில்வ்யாமோஹாதிசயத்தாலே திருக்கைகளாலே ஏந்திக்கொண்டென்றபடி. தாமரைக்கண்ணன் - ஸர்வோத்தரஸ்வரூபன், ஆயுதங்களையுந் திருக்கண்களையும்சேர வநுஸந்தித்தது இவைகளுடையவந்யோந்யஸாம்யம் ஸந்நிதானத்துக்குண்டாயிருக்கையாலே. அதாவது:— திருக்கண்களைப்போலே திவ்யாயுதங்களும் திருமேனிக்கலங்காரமாயிருக்கையாலும் திவ்யாயுதங்களைப்போலே திருக்கண்களும் எல்லாரையும் தோற்றுக்காலிலே விழப்பண்ணுகையாலுமென்றபடி. என்னெஞ்சின் - என்னுடைய, ஊடே - மத்யத்திலே, புள்ளை - பக்ஷியை, கருடனை என்றபடி, கடாகின்ற- ஸ்வேச்சையாக நடத்துகிற, ஆற்றை - ப்ரகாரத்தை. ஆறு - ப்ரகாரம், கடாகின்ற ஆற்றைஎன்கிறவிடத்திலே ஸப்தமியிலேயகாராகமம். காணீர்-காண்கிறிகோளில்லை. உங்கள்நெஞ்சிலே தோற்றாத மாத்ரத்தைக்கொண்டு நீங்களிதுகூடாதென்றிருக்கக்கூடுமோ வென்றுகருத்து. நாங்கள் காணுமாகில் நீசொல்லலாகாதோவென்ன? உத்தரஞ் சொல்லுகிறாள். என்சொல்லி - என்ன பாசுரத்தைச் சொல்லி, சொல்லுகேன் - என்னெஞ்சில்நடக்கிற வாஸ்சர்யத்தைச் சொல்லக்கடவே னென்றபடி. அதுவாசாமகோசரமென்றுகருத்து. வெள்ளச்சுகம் - வெள்ளமான ஸுகங்களை யுடையவனுடைய, நிரவதிகாநந்த பூர்ணனை வென்றபடி. அவன் - அந்த பரமசேஷியானவன், வீற்றிருந்த - வீறு தோன்றும்படி இருந்த, வீறு - உத்கர்ஷம், ஸர்வோத்கர்ஷந்தோன்றும்படி எழுந்தருளியிருந்தவிடமான என்றபடி. இதுதிருப்பேரைக்கு விசேஷணம். வேதவொலியும் - வேதகோஷமும், ஒலி - கோஷம், விழா

மூ— ஒலியும்* பிள்ளைக்குழா விளையாட்டொலியுமறாத்திருப்பேரையிற்சேர்வன்நானே* ||௨||
நானக்கருங்குழற்றோழிமீர்காளன்னையர்காளயற்சேரியீர்காள்* நானித்தனிநெஞ்சங்காக்கமாட்டேனென்

ஆ— உத்ஸவயுக்தனாய் ஸர்வேஶ்வரனைக் கொண்டிருக்கிற திருப்பேரைக்காணவேணும்; நீங்களென்னைக் கொண்டுபோய்விடீர்களாகில் நானேயாகிலும் போவேனென்று தன்னை ரக்ஷிக்கிற தாய்மாரையும் தோழிமாரையுங்குறித்துச்சொல்லுகிறாள். ||௧||

(நானக்கருங்குழல்) ஸுகந்தி ஸ்நிக்த நீலகேஶங்களையுடைய தோழிமாருமன்னையரும் மற்றுமுள்ள பந்துஜனங்களும் நீதனியேபோகையிடல்லவென்றுசொல்ல, அவர்களைக்குறித்து நானென்னுடைய ஸ்வதந்த்ரமான நெஞ்சைக் காக்கமாட்டேன், எனக்குவியப்பன்று, ஆஶ்ரிதஸம்ரக்ஷணார்த்தமாகத் திருநாட்டில்நின்றும் ஸ்ரீவைகுண்டநாதர் திருமகளோடு வந்துபிறந்தருளி, அக்காலத்தில் பெறுதாருடைய விழவுதீரும்படி தேன்மொய்த்தபூம்பொழில் தண்பணைசூழ் தென்திருப்பேரையில் ஸர்வேஶ்வரனையெழுந்

இ—ஸம்ஶ்லேஷேத்யாதியால்) சேர்வன்நானே என்கிறவிடத்தில் வ்யாக்யானத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நீங்களென்னையித்யாதியால்) சேர்வன்நானே என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நானேயாகிலுமித்யாதியால்) ||௧||

நான் திருப்பேரையிலேபோயல்லது நில்லேனென்று சொல்லவந்தவிவள் அத்தைப்பாட்டிலே என்னெஞ்சவன்பக்கலிலே கிடக்கிறதென்றுசொல்லுகை யுக்தமன்றோவென்ன விதுக்குத்தாத்பர்யஞ்சொல்லுகைக்காக ஶங்கிப்பிக்கிறார் (ஸுகந்திஸ்நிக்தேத்யாதியால்) இத்தால் ப்ரயோஜனத்தில் பந்துக்களுக்கவதானமும் ஸூசிதமாயிற்று. த்விதீயபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நானென்னுடையவித்யாதியால்) மணிவண்ணனென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆஶ்ரிதேத்யாதியால்) கண்ணனென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸ்ரீவைகுண்டேத்யாதியால்) அக்காலத்திற்பெறுதாருடையவென்றது - அந்த க்ருஷ்ணாவதாரகாலத்திலே ப்ரஸவிக்கப்பெறுதாருடைய என்றபடி. வானப்பிரானென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸர்வேஶ்வரனித்யாதியால்) பாட்டுக்கு ஸாரதாத்பர்யமருளிச்செய்கிறார்

ஸ— ஒலியும் - உத்ஸவ கோஷமும், விழா - உத்ஸவம், உத்ஸவங்களிலுண்டான ஶங்கவாத்யாதி கோஷமுமென்றபடி. பிள்ளைக்குழா - பாலஸமூஹத்தினுடைய, குழா - ஸமூஹம், விளையாட்டொலியும் - க்ரீடனத்திலுண்டானகோஷமும், க்ரீடனகாலத்திலே பாலப்ராயமவர்கள் சொல்லுகிற ஸம்ஜ்ஞாஶப்த கோலாஹலமுமென்றபடி. அறா - அறுதலான, விச்சேதியாததானதென்றபடி. இதுவெல்லாம் நித்யமாக நடவாநிற்கிறதான வென்றபடி. திருப்பேரையில் - திருப்பேரையென்கிற திவ்யநகரத்திலே. நானே - நான்தானே, நீங்கள் கொண்டுபோய் விடீர்களாகில் நான்தானேயாகிலுமென்றபடி. சேர்வன் - போவேன். ||௧||

ப— நானக் கருங்குழல் - ஸுகந்தி ஸ்நிக்தங்களாய் நீலங்களான கேஶங்களையுடையவர்களான, நானமென்று மயிர்முடிக்கிடும் பரிமளத்ரவ்யத்துக்குப்பேர். நானக்கருங்குழலென்று பஹுவ்ரீஹி ஸமாஸ:. இப்படிவர்ணநீயமான கேஶங்களானவுங்கள் ஸம்ருத்தியில்லையாகில் நானங்குப்போகவிரேனோ வென்று கருத்து. இவளோடு ஸம்ஶ்லேஷகாலத்திலே தானேசாற்றிக்கழித்தவையாய் "நமஸ்ஸ்வம்ஶ்ரித்ய ஸம்பத்தே" என்கிறகணக்கிலே தங்களுக்கவன் ப்ரஸாதித்தருளினவையான ஸுகந்திவஸ்துக்களையெல்லாம் தோழிமார்கள் அவன்பக்கல் ப்ரீதியாலே ப்ராதிபயித்துக்கொண்டிருக்கையாலே யவர்களுடைய ஸம்ருத்தியேயிவளுக்கு உத்தீபகமாய் ஸ்மாரகமாய்க்கொண்டு பாதகமாயிருக்கையாலே இப்படிசொல்லுகிறாள். தோழிமீர்காள் - ஸகிகாள், அன்னையர்காள் - தாய்மார்காள், அயல் - அசலாரான, ஸஜாதீயஜந வ்யதிரிக்தரான என்றபடி. சேரியீர்கள் - ஊரிலிருக்கிறவர்காள், சேரி - ஊர், சேரியிலிருக்குமவர்கள் சேரியார், சேரியீர்களென்று ஸம்போதநம். அந்தரங்கைகளான தோழிமாரோடு அந்தரங்கைகளான தாய்மாரோடு அந்தரங்கரல்லாதாரோடு வாசியற இவளுடைய பாவத்தை யெல்லாரு மறியும்படியாய்த் திவளுடைய பாரவஶ்யம். நான் - அவன்பேர் சொன்னால் நையும் ப்ரக்ருதியான நான், இத்தனி நெஞ்சம் - இந்த தனிநெஞ்சத்தை, சொல்விற்றுக் கேளாதே, ஸ்வதந்த்ரமான விதேயமல்லாத நெஞ்சென்றபடி. "மனோவஸ்யம் ந க்ஷிப்யதி" என்றுகொண்டு ஒருவரையும் பாராதே போகாநின்ற விதேயமல்லாத நெஞ்சை. காக்கமாட்டேன் - அவன் பக்கல் போகாதே தகையமாட்டேன்

மூ—வசமன்றிராப்பகற்போய்த்* தேன்மொய்த்தபூம்பொழிற்றண்பணைசூழ்தென்திருப்பேரையில்வீற்றிருந்த* வானப்பிரான்மணிவண்ணன்கண்ணன்செங்கனிவாயின்றிறத்ததுவே* ॥உ॥

செங்கனிவாயின்றிறத்ததாயுஞ்செஞ்சுடர்நீண்முடித்தாழ்ந்ததாயுஞ்* சங்கொடுசக்கரங்கண்டுகந்துந்தாமரைக்கண்களுக்கற்றுத்தீர்ந்தும்* திங்களுநாளும்விழாவறாததென்திருப்பேரையில்வீற்றிருந்த* நங்கள்பிரானுக்கென்னெஞ்சந்தோழிநாணுநிறையுமிழந்ததுவே* ॥ங॥

ஆ—தருளியிருந்தவவனுடைய ஸகலஸௌந்தர்யத்தாலே புதுக்கணித்த திருப்பவளத்திலே என்னெஞ்சிராப்பகல் போய்ப்படிந்துகிடக்கும், இனிநானெங்ஙனே போகாதிருக்கும்படியென்கிறாள். ॥உ॥

(செங்கனிவாயின்) உன்னுடைய லஜ்ஜை நிறைவுக்கும்போருமோ தனியேபோகையென்று தோழிசொல்ல திருப்பவளத்தினழகிலே போய்ப்படிந்தும் திருப்பவளத்திலொளிகொழுந்துவிட்டு மேனோக்கிவளர்ந்ததோவென்னும்படி நீண்டிருந்த திருவபிஷேகத்திலழகிலேதாழ்ந்தும், திருவாழியுந் திருச்சங்குமேந்தின வழகைக்கண்டுகந்தும், மற்றோரழகுக்குரித்தல்லாதபடி தாமரைக்கண்களுக்கற்றுத்தீர்ந்தும், என்னுடையநெஞ்

இ—(இனிநானித்யாதியால்) ॥உ॥

✳ மூன்றும்பாட்டு ✳

ஸ்நேஹவன்பக்கலிலே ப்ரவணமாயிருக்கிறதென்று கீழ்ப்பாட்டிற்சொன்ன வைலக்ஷண்யத்தையே சொல்லுகிறதாகையாலிப்பாட்டு ஸங்கதியன்றோவென்ன விதுக்குத் தாத்பர்யஞ்சொல்லுகைக்காக அவதாரிப்பிக்கிறார் (உன்னுடையவித்யாதியால்) லஜ்ஜாதிகள் நிச்சேஷமாய்ப்போயிற்றென்கையிலே பாட்டுக்குத் தாத்பர்யமாகையால் ஸங்கதியில்லையென்றதாய்த்து. நிறைவு - அடக்கம், அதாவது:— நெஞ்சிலேயோடுகிறது ஒருவர்க்குந்தெரியாதபடியிருக்கை. செஞ்சுடர்நீண்முடித்தாழ்ந்ததாயுமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (திருப்பவளத்திலொளியித்யாதியால்) தாமரைக்கண்களுக்கற்றுத்தீர்ந்துமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்

ப—என்வசமன்று- எனக்கு விதேயமன்று, இது, ஸ்நேஹமானது, இராப்பகல்- ராத்ரிந்திவம், சிலபோதுமோவஷயமுஞ்சிலபோதுவஸ்வாபயாதெயுமாயிருந்ததாகில்றே ஹிதஞ்சொல்லிமீட்கலாவதென்றுகருத்து. போய்- விட்டுப்போய், இதுக்கு திறத்ததுவென்கிறதோடே அந்வயம்., தேன் - வண்டுகளானவை, தேனென்றுவண்டுக்குப் பேர். மொய்த்த — நிபிடமாகசுவஸித்துக்கொண்டிருக்கிற, பூம்பொழில் — புஷ்பிதோத்யானங்களாலும், தண்- சீதளங்களான, பணை - நீர்நிலங்களாலும், பணை - நீர்நிலம், சூழ்- வளைவுநீத்யானை, தென் - தக்ஷிணதேசஸ்தமான திருப்பேரையில் - திருப்பேரையென்கிற திவ்யநகரத்திலே, வீற்று — வீறுபெற்று, வீறு - உத்கர்ஷம், ஸ்வவைலக்ஷண்ய வைபவமெல்லாம தோற்றும்படிஎன்கை. இருந்த — எழுந்தருளியிருந்தவனை, வானப்பிரான் - பரமவ்யோமத்திலிருக்கு முபகாரகனை, வானம் — பரமவ்யோமம், பரமபதத்திலே தானிருக்கிறபடியையெல்லாம் நமக்காகவிங்கேயிருந்துகாட்டுகிற உபகாரகனென்றபடி. மணிவண்ணன் - நீலமணிவர்ணனை, மணி போலே முடிந்தாளலாம்படி ஸுலபனை என்றபடி. கண்ணன் - க்ருஷ்ணனுடைய செங்கனிவாயின் றிறத்தது- சிவந்தகனிபோலே யிருக்கிறவதரத்தின் விஷயத்திலே யிருக்கிறது. கனி - பழம், இங்கே பிம்பபலம் விவக்ஷிதம். திறம் - விஷயம்' திறத்தி லிருக்குமது திறத்தது, தத்விஷயப்ரவணமாயிருக்கிறதென்றபடி. ஆதலால்நானங்குப்போய்சேராதிருக்கமாட்டேனென்றுகருத்து. ॥உ॥

ப- தோழி - வயஸ்ய ஸகியே, என்னெஞ்சம் — என்னுடைய ஸ்நேஹமானது, செங்கனிவாயின் றிறத்ததாயும் - சிவந்தகனிபோலே யிருக்கிற அதரவிஷயத்திலே ஆஸக்தமாயும், செஞ்சுடர் - ஸுரக்தகிரணப்ரசுரமான, நீண்முடி - உத்துங்கமானகிரீடத்திலே, தாழ்ந்ததாயும், ப்ரவணமானதாயும், சங்கொடு - ஶங்கத்தோடு, சக்கரம் - சக்ரத்தையும், கண்டுகந்தும் - ஸந்தர்ஶித்து ஸந்தோஷித்தும், தாமரைக்கண்களுக்கு — தாமரஸ ஸத்ருஶங்களான நேத்ரங்களுக்கு, அற்றுத்தீர்ந்தும் - மற்றொரு அவயவங்களுக்கும் ஶேஷமாகாதபடி யவற்றுக்கே ஶேஷமாயு மென்றபடி. இதுக்குநிறையு மிழந்ததுவென்கிறத்தோடே அந்வயம். திங்களும் — மாஸங்களிலும், நாளும் - தினங்களிலும், விழா- உத்ஸவங்கள், மாஸோத்ஸவங்களும் நித்யோத்ஸவங்களுமென்றபடி. அறாத — விச்சேதியாததான, தென்திருப்பேரையில் வீற்றிருந்த- ஸ்ரேஷ்டம், நங்கள் பிரானுக்கு — நம்முடைய உபகாரகனுக்கு, ஸர்வாவதாரத்தாலேதமக்குஸாதாரணனையுபகாரகனையவனுக்கு. நாணும் - லஜ்ஜையும், நிறையும் — அடக்

மூ—இழந்தவெம்மாமைத்திறத்துப்போனவென்னெஞ்சினாருமங்கேயொழிந்தார்* உழந்தினியாரைக்கொண்டென்னுசாகோவோதக்கடலொலிபோலவெங்கு* மெழுந்தநல்வேதத்தொலிநின்றோங்குதென்திருப்பேரையில்வீற்றிருந்த* முழங்குசங்கக்கையன்மாயத்தாழ்ந்தேனன்னையர்காளென்னைமுனிந்தே* ||௪||

ஆ—சானது திங்களும்நாளும் விழாவறாத தென்திருப்பேரையிலேவீற்றிருந்த நங்கள்பிரானுக்குநாணும்நிறைவுமிழந்தது, இனியெனக்கு நாணும்நிறைவுமுண்டோவென்று தோழியைநோக்கிச்சொல்லுகிறாள். ||௩||

(இழந்த) யாதாமோதபாதமோவென்று நிரூபியாதே போகப்பெறலாமோவென்றன்னைமார்தன்னைமுனிய இழந்தவெம்மாமைதிறத்துப்போன வென்னெஞ்சினாரு மவனுடையவழகைக்கண்டு என்னைமறந்துவாராதேயங்கேயொழிந்தார், இனி இங்கிருந்தென்ன வ்யாபாராக்ஷம்ஸாயிப்பது, ஆரோடேயெத்தைநிரூபிப்பது, ஓதங்கிளருகிற கடலினுடைய கோஷம்போலேஇருந்த ஸமஸ்தமான வேதகோஷத்தாலே ஸத்ருஸமான தென்திருப்பேரையிலே வீற்றிருந்தருளினவிவனுடைய நண்ணாவசுரர் நலிவெய்துநல்ல வமரர்பொலி

இ—செய்கிறார் (மற்றோரழுக்கித்யாதியால்) உரித்தல்லாதபடியென்றது - ஶேஷமாகாதபடியென்கை, உரித்து—ஶேஷபூதம். ||௩||

✳ நாலாம்பாட்டு. ✳

திருப்பேரைக்கு நான்தானேபோவேனென்றபோதே தானவன்பக்க லதூரஸக்தையென்னுமிடம் ஸவ்ஷமாயிருக்க விப்பாட்டிலுமவ்வஸ்த்தைச்சொல்லுகை வ்யாநாக்யன்றோவென்ன விதுக்குத்தாத்பர்யஞ்சொல்லுகைக்காக வவதரிப்பிக்கிறார் (யாதமோவித்யாதியால்) அங்கேயொழிந்தாரென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவனுடையவழகையித்யாதியால்) உழந்தினியென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இனியித்யாதியால்) ஆரைக்கொண்டென்னுசாகோஎன்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆரோடேயித்யாதியால்) நல்வேதஎன்கிறத்தையுரைக்கிறார் (ஸமஸ்தமித்யாதியால்) ஓங்குஎன்கிறத்தையுரைக்கிறார் (ஸத்ருஸமானவென்று) முழங்குஎன்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நண்ணாவசுரரித்யாதியால்) க்ஷயஸ்த்; நண்ணா - தன்னைபாராயிபாதவர்களான, அசுரர் - க்ஷராவர்களானவர்கள், நலிவு - வேதனையை,

ஈ— சுத்தையும், இழந்தது - ஸ்பஷ்டம், வகாரம்வாக்யபூரணம். ||௩||

ம இழந்த - என்னாலே இழக்கப்பட்டதான, அவனபஹரித்துக்கொண்டுபோனதான வென்றபடி. எம்மாமை - என்னுடைய மாமையுடைய, திறத்து - விஷயத்திலே, மாமை - காந்தி, அவனபஹரித்துக்கொண்டுபோன வென்னுடைய காந்திக்காக வென்றபடி. போன - அவன்பக்கலிலே போனதான, என்னெஞ்சினாரும் - என்னுடையமநஸ்ஸும், அவனுக்காக வன்றிக்கே என் காந்திக்காகப்போன வென்மநஸ்ஸு மென்றபடி. நெஞ்சினாருமென்கிறபஹுவசநம் அங்கேபோயவரோடேகூடினவாறேமிகவும்பெரியவராயென்னைமறந்துவிட்டாரென்று வ்யஞ்ஜிப்பிக்கைக்காக. அங்கே - அவ்விடத்திலேதானே, ஒழிந்தார் - நின்றுவிட்டார், அவனழகைக்கண்டவாறே அங்கே நின்றுவிட்டாரென்றபடி. இனி - இப்படி நெஞ்சுபோனபின்பு, உழந்து - க்லேஶப்பட்டுவ்யாபாராக்ஷம்மொன்றுமின்றிக்கேதுக்கப்பட்டுஎன்றபடி. ஆரைக்கொண்டு- ஆரைஸஹாயமாகக்கொண்டு, என் - என்னத்தை, எந்தவஸ்த்துவைஎன்றபடி. உசாகோ - உசாவுவேன், ஸம்வாதம் பண்ணி நிரூபிக்கக்கடவேனென்றபடி. உசாவுகை - ஸம்வாதம்பண்ணுகை, கோ வென்றது கிம்ஶப்தபர்யாயமாய்க்கொண்டு க்ஷேபார்த்தம். மநஸ்ஸுபோனபின்பு யாதாயாதம் நிரூபிக்ககூடுமோ வென்றுகருத்து. ஓதக்கடல் - ஓதத்தையுடைத்தான ஸமுத்ரத்தில் ஓதம் - தரங்கஸங்கம், ஒலிபோல - கோஷம்போலே, எங்கும் - ஸர்வப்ரதேஶத்திலும், எழுந்த - உஜ்ஜ்ரும்பிதங்களான, நல் - ஸமஸ்தமான, வேதத்து. வேதங்களினுடைய, ஒலி - கோஷமானது, நின்று - ஸ்தாயியாய்க்கொண்டு, ஓங்கு - ஓங்காநின்ற, ஸத்ருஸமாகாநின்றவென்றபடி. தென்திருப்பேரையில்வீற்றிருந்த - ஸ்பஷ்டம், முழங்கு - ஶப்தாயமாநமான, அந்த வேதகோஷ ப்ரதித்வநியாலே ஶப்தாயமாநமாகாநின்றவென்றபடி. சங்கக்கையன் - ஶங்கத்தைக்கையிலே யுடையவனான வெம்பெருமானுடைய, மாயத்து - மாயையிலே, ஆஶ்சர்யமான வழகிலே, ஆழ்ந்தேன் - மக்நையானேன் அன்னையர்காள்?- தாய்மார்காள்? என்னை - இப்படியிருக்கிற வென்னை, முனிந்து - கொபித்து, என்?- என்னப்ரயோஜநமுண்டு, நீங்கள் தாய்மாரான ஸம்பந்தத்தாலே கொபிக்கப்போமோ வென்றுகருத்து. ||௪||

மூ—முனிந்துசகடமுதைத்துமாயப்பேய்முலையுண்டுமருதிடைபோய்* கனிந்தவிளவுக்குக்கன்றெறிந்தகண்ண பிரானுக்கென்பெண்மைதோற்றேன்* முனிந்தினியென்செய்தீரன்னைமீர்காண்முன்னியவன்வந்துவீற்றிரு ந்த* கனிந்தபொழிற்றிருப்பேரையிற்கேகாலம்பெறவென்னைக்காட்டுமினே* ||௫||

ஆ— வெய்தும்படி முழங்குகிற ஸ்ரீபாஞ்சஜந்யத்தையேந்தினவழகு வெள்ளத்திலேபுக்கழுந்தினேன், இனியென்னை முனிந்து ப்ரயோஜநமென்னென்று தன்னுடைய அன்னைமாரைநோக்கிச்சொல்லுகிறாள். ||௪||

(முனிந்து) உன்னுடையஸ்த்ரீத்வத்துக்குப் போருமோவென்றவர்கள் பின்னையுந்தன்னைமுனிய, ஸந்நத்தியாய் ரோஷத்தாலே சகடத்தைப்பாய்ந்த விருத்தசேஷ்டிதத்துக்கும் வஞ்சனையால்வந்த பேய்ச்சிமாயும்படி முலையுண்டவிருத்தசேஷ்டிதத்துக்கும், கனிந்தவிளவுக்குக் கன்றெறிகைக்காக விளங்கனியைக்குறித்துப்பார்த்தருளின பார்வைக்கு மென்பெண்மைதோற்றேன், நீங்களினியென்னைமுனிந்துசெய்வதென்? என்னுடைய வரவுபார்த்து முன்னமேபோயவன் வீற்றிருந்த நிரவதிகஸௌரப்யமான சோலையையுடைத்தான தென்திருப்பேரையிலே கொண்டுபோயவன்பக்கலிலே யென்னை யீண்டக்காட்டிக்கொடுங்கோளென்கிறாள். ||௫||

இ— எய்து - அடைந்து, நல்ல - நல்லவர்களான, தன்னையாச்ரயித்தவர்களானவென்றபடி. அமரர் - தேவர்களானவர்கள், பொலிவு - வ்ருத்தியை, எய்தும்படி - அடையும்படி, பாயத்தாழ்ந்தேனென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அழகித்யாதியால்) ||௪||

✳ ஐந்தாம்பாட்டு. ✳

அவன்பக்கல்நானத்யந்தப்ரவணையானேன், என்னைநீங்கள் முனிந்தென்னப்ரயோஜநமென்று கீழ்ச்சொன்னவர்த்தத்தையே சொல்லுகையாலே யிப்பாட்டு புநருக்தியன்றோவென்ன அவதாரிப்பிக்கிறார் (உன்னுடையவித்யாதியால்) முனிந்துசகடமுதைத்துஎன்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸந்நித்யாதியால்) மாயப்பேய்முலையுண்டுஎன்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (வஞ்சனையாலித்யாதியால்) முன்னியவன்வீற்றிருந்தஎன்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னுடையவரவித்யாதியால்) கனிந்தபொழிலென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நிரவதிகேத்யாதியால்) திருப்பேரையித்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தென்திருப்பேரையிலேஇத்யாதியால்) ||௫||

✳ ஆறாம்பாட்டு. ✳

எனக்கவன்பக்கலிலே அபிநிவேசாதிசயமென்னும் என்னைத்திருப்பேரையிலே கொண்டுபோய்க்காட்டுங்கோளென்னும் கீழ்ச்சொன்னவர்த்தங்களையே சொல்லுகிறதாகையாலேயிப்பாட்டு புநருக்தியன்றோ

ப— முனிந்து - கோபித்து, "ஸந்நத்தீவ்ரரோஷண:" என்கிறபடியேஸந்நத்தியாய் அது விளம்பித்தவாறே கோபித்தென்றபடி. சகடம் - சகடத்தை, உதைத்து - திருவடிகளாலே தாடநம்பண்ணி, மாய - வஞ்சகையான, பேய் - பூதநையினுடைய, முலை - ஸ்தநத்தை, உண்டு - அமுதுசெய்து, மருது - யமளார்ஜுந வ்ருக்ஷங்களுடைய, இடை - மத்யத்திலே, போய் - அஸுராவேசங்களானவவற்றிலகப்படாதே தப்பிப்போய், கனிந்த - பக்வமான, விளவுக்கு - கபித்தவ்ருக்ஷத்துக்கு, விளவு - கபித்தம், கன்றெறிந்த - வத்ஸத்தை எடுத்தெறிந்தவனை, கபித்தாஸுரனாய்நின்ற அஸுரன்மேலே வத்ஸாஸுரனாய்வந்திருந்த அஸுரனைபலநிபாதநார்த்தம்கல்லெறிவாரைப்போலே எறிந்தவிசித்ரசேஷ்டிதனையென்றபடி. கண்ணபிரானுக்கு - க்ருஷ்ணனான உபகாரகனுக்கு, அந்தக்ருஷ்ணாவதாரத்தில் விசித்ரசரித்ரங்களை யெல்லாம் எனக்கு ப்ரகாசிப்பித்த உபகாரகனுக் கென்றபடி. என்பெண்மை - என்னுடைய ஸ்த்ரீத்வத்தை, தோற்றேன் - இழந்தேன், இனி - இப்படியானபின்பு, அன்னைமீர் - தாய்மார்காள், முனிந்து - என்னைகோபித்து, என்செய்தீர் - என்னகார்யஞ்செய்யாநிற்கிறீர்கோள், இந்தமுனிவாலொரு ப்ரயோஜநமுமில்லையென்றபடி. முன்னி - முற்பட்டே, என்னுடைய வரவு பார்த்துக்கொண்டு எனக்கு முன்னேதானே என்றபடி. அவன்வந்து வீற்றிருந்த - அவன்வந்தெழுந்தருளியிருந்தவிடமான, கனிந்தபொழில் - பரிபக்வபலமான உத்யாநங்களையுடைத்தான, திருப்பேரையிற்கே - திருப்பேரையென்கிறதிவ்யநகரத்துக்கு, காலம்பெற - சீக்ரமாக, என்னை - அவன்வருமளவும் விளம்பம் பொறுக்கமாட்டாதவென்னை, காட்டுமின் - காட்டுங்கோள், திருப்பேரையிலிருக்கிறவனுக் கென்னைக் கொண்டுபோய் சீக்ரமாகக் காட்டுங்கோளென்றபடி. ||௫||

மூ— காலம்பெறவென்னைக்காட்டுமின்கள்காதல்கடலின்மிகப்பெரிதா* னீலமுகில்வண்ணத்தெம்பெருமானிற்
குமுன்னேவந்தென்கைக்குமெய்தான்* ஞாலத்தவன்வந்துவீற்றிருந்தநான்மறையாளரும்வேள்வியோவாக்*
கோலச்செந்நெற்கள்கவரிவீசுங்கூடுபுனற்றிருப்பேரையிற்கே* ||சு||

---

ஆ—(காலம்பெற) வேட்டைக்கெழுந்தருளினவத்தனையன்றோ இப்போதே யெழுந்தருளுகிறானிறே, இங்ஙனே பதறவேணுமோ, என்று அவர்கள்சொல்ல, எனக்கவன்திறத்திலுள்ள அபிநிவேசவெள்ளத்துக்கொரு முடிவில்லை, நீலஜலதநிபமான திவ்யரூபத்தினுடைய வழகாலேயென்னைத்தோற்பித்தடிமையாக்கினவனென் கண்ணிலேவந்துதோற்றாநிற்கும், என்கைக்குமெய்தான், பரமபுருஷஸமாராதனைகவேஷ நித்யநைமித்திகாதி ஸகலகர்மாநுஷ்டாநநிரதராய் வேதவிதக்ரேஸரரான திவ்யஜநங்களாலே ஸததபரி பூர்ணமாய், ஸ்பர்ஹணீய பரிணதசாலிவநசாமரங்களாலே வீஜ்யமாநமாய் ஸஸ்யஸம்ருத்தமான ஸ்ரீ

---

இ—வென்ன வவதரிப்பிக்கிறார் (வேட்டைக்கித்யாதியால்) காதல்கடலின்மிகப்பெரிதாலென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (எனக்கித்யாதியால்) த்விதீயபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நீலஜலதேத்யாதியால்) வேள்வியோவாவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பரமபுருஷேத்யாதியால்) நான்மறையாளருமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (வேதவிதித்யாதியால்) கோலச்செந்நெற்கள் கவரிவீசுமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸ்பர்ஹணீயேத்யாதியால்) கூடுபுனலென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸஸ்யஸம்ருத்தேத்யாதியால்) ஞாலத்தவன்வீற்றிருந்தவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்

---

ஶ— காதல் - அபிநிவேச மானது, எனக்கவனைக் காணவேணுமென்கிற அபிநிவேசமானதென்றபடி, கடலில் - ஸமுத்ரத்தைக்காட்டில், மிகப்பெரிது - மிகவும் பெரியதாய் இருக்கிறது, ஆலென்று கேதத்யோதகம் ஆதலால் அவனுகவருமளவும்விளம்பம் பொறுக்கமாட்டேனென்றுகருத்து, ஆனாலும் காதலை யளவுபடுத்திக் கொண்டு நீ நாங்கள்சொல்லுகிற வார்த்தையைக்கேட்கவேண்டாவோவென்ன? சொல்லுகிறாள். நீலமுகில் வண்ணத்து - நீலஜலதவர்ணத்தை யுடையவனை, வண்ணத்தை யுடையவன் வண்ணத்தன், வண்ணத் தெம்பெருமானென்று ஸமாஸம். எம்பெருமான் - அவ்வழகாலே என்னை யடிமை யாக்கிக்கொண்டவன், முன்னே வந்து - என்கண் முன்னேவந்து- நிற்கும் - நில்லாநிற்கிறான், கண்ணுக்குத் தோற்றுமாப்போலே தோற்றாநிற்கிறானென்றபடி. இப்படியவன்வந்து முன்னே நின்றிலனாகில் நானுங்கள் வார்த்தையைக்கேட்டு மீளேனோ அவனிப்படி வந்து முன்னேநிற்க வென்னால் மீளப்போமோ வென்றுகருத்து. இப்படியவன்வந்து முன்னே நின்றானாகில் உன்னபிமதம் தலைக்கட்டித்தே யென்ன? சொல்லுகிறாள். என்கைக்கும்- என்னுடைய கைகளுக்கும், எய்தான் - எட்டான், வார்த்தைசொல்லுதல் அணைத்தல்செய்யாமை தாத்பர்யமன்று. கைக்குங் கூடக்கிட்டுகிறானில்லை யென்றபடி. ஆனால் - நீ செய்யநினைக்கிறதென்னென்னில் சொல்லுகிறாள்மேல், ஞாலத்து - ப்ருதிவியிலே, அவன் - அந்தஸர்வேஶ்வரன், வந்து - தன்னழகோடே வந்து, வீற்று - வீறுபெற்று, தன்னுடைய ஸர்வேஶ்வரத்வ வைபவம் ப்ரகாசிக்கும் படியென்கை. இருந்த - எழுந்தருளியிருந்த ஸ்தலமான, இது திருப்பேரைக்கு விசேஷணம். நான்மறையாளரும் - சதுர்வேத ஶாகிகளான ஸ்ரீவைஷ்ணவர்களும், மறை - வேதம், மறையுடையவர்கள் மறையாளர், மறையாளருமென்கிற வைஷ்ணவத்வத்தின்மே லிருக்கிற உகாரம் கவரி வீசு மென்கிறத்தோடே ஸமுச்சயார்த்தம். ஸர்வஜ்ஞரான வைஷ்ணவர்களும் அஜ்ஞங்களான செந்நெற்களும் ஒக்க கைங்கர்யம்பண்ணும்படி யிருக்கிற என்று ஸமுச்சயத்துக்குத் தாத்பர்யம். வேள்வி - யாகங்களிலே, நித்யநைமித்திக ரூபங்களான ஸமாராதனங்களிலே என்றபடி. ஓவா - ஓயாதவிடமான, ஸர்வதா நித்யநைமித்திக ஸமாராதனங்களை யநுஷ்டியாநிற்கிறவிடமானஎன்றபடி. இதுவும்திருப்பேரைக்குவிசேஷணம். கோல - ஸ்பர்ஹணீயங்களான, செந்நெற்கள் - பரிபாகதசையிலேசிவந்திருக்கிறநெல்லுகளானவை, கவரிவீசும் - சாமரம் வீசாநிற்கிற, பாகவிநம்ரங்களானகதிர்கள் ஸஞ்சலித சிரஸ்ஸுக்களாய்க்கொண்டு அசைகிறபோது சாமரம் வீசுகிறாப்போலே யிருக்கிறதென்றுகருத்து. நான்மறையாளரும் வேள்வியிலே ஓயாதவர்களாய் செந்நெற்களும் கவரிவீசுகிறனவா யிருக்கிறஸ்தலமான என்று பதார்த்தம். கூடுபுனல் கூடினஜலங்களை யுடைத்தான. சேர்ந்தஜலங்களை யுடைத்தானவென்றபடி. அந்தஸமாராதனங்களுக்கும்செந்நெற்களுக்குமநுரூபமானஜலஸம்ருத்தியையுடைத்தான வென்கை. திருப்பேரையிற்கே - திருப்

மூ — பேரெயிற்சூழ்கடற்றென்னிலங்கைசெற்றபிரான்வந்துவீற்றிருந்த* பேரெயிற்கேபுக்கென்னெஞ்சநாடிப் பேர்த்துவரவெங்குங்காணமாட்டேன்* ஆரையினியிங்குடையந்தோழியென்னெஞ்சங்கூவவல்லாருமில்லை* யாரையினிக்கொண்டென்சாதிக்கின்றதென்னெஞ்சங்கண்டதுவேகண்டேனே* ॥எ॥

ஆ — ஸர்வஸம்ருத்தி ஸம்ருத்தமாயிருந்த திருப்பேரையிலே யெனக்காகவெழுந்தருளியிருந்த பெரியபெருமாள் பக்கலிலே காலம்பெற வென்னைக்காட்டுமின்களென்று தன்னுடைய வன்னைமாரைநோக்கிச்சொல்லுகிறாள். ॥௬॥

(பேரெயில்) உனக்கவன்பக்கலுள்ள ஸஹிமிவஸம் நிரவதிகமாயிருந்ததாகிலும், அவனெழுந்தருளுமளவு மிங்கேயிருக்குமத்தனை, அங்குப்போகை யுக்தமன்றென்று தோழிசொல்ல, சதுஸ்ஸஹஸ்ர ப்ராகாரஸமிருத்தமான லங்கையிலே ராவணனை ஸவாந்தவமாகக் கொன்றருளின விஜயலக்ஷ்மி ஸமிருத்தனாய்க்கொண்டு தென்றிருப்பேரையிலே யெழுந்தருளியிருந்த விருப்பைக்கண்டென்னெஞ்சின்னம் மீண்டுவாராது, எனக்கிங்கொருதுணையுமில்லை. துணையானவென்னெஞ்சை யழைக்கவல்லாருமில்லை, இங்காரைக்கொண்டென்ன ஸாபேக்ஷம் ஸாதிப்பது இனியென்னெஞ்சு புக்க தேசத்திலேபோய்ப்புகுமத்தனையென்று தன்தோழியைக்குறித்துச்சொல்லுகிறாள். ॥௬॥

இ — செய்கிறார் (எனக்காகவித்யாதியால்) ॥௬॥

## ✳ ஏழாம்பாட்டு. ✳

நெஞ்சங்கேபோயிற்றென்றும் திரும்பிவரக்காணேனென்றும் எனக்கிங்காருமில்லையென்றும் நானுமங்கேபோவேனென்றும் கீழ்ச்சொன்னவர்த்தங்களையே யிப்பாட்டிலுஞ்சொல்லுவானேனென்ன வவதாரிப்பிக்கிறார் (உனக்கித்யாதியால்) பேரெயிலென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (சதுஸ்ஸஹஸ்ரேத்யாதியால்) சூழ்கடற்றென்னிலங்கை செற்றபிரானென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஜயஸ்ரீத்யாதியால்) வீற்றிருந்தவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (விஜயேத்யாதியால்) பேர்த்துவரவெங்குங்காணமாட்டேனென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நெஞ்சின்னமித்யாதியால்) ஆரையினியிங்குடையமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (எனக்கிங்கித்யாதியால்) என்னெஞ்சங்கூவவல்லாருமில்லையென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (துணையானவென்னெஞ்சையித்யாதியால்) என்னெஞ்சங்கண்டதுவேகண்டேனென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இனியென்னெஞ்சித்யாதியால்) ॥எ॥

ப — பேரையென்கிற திவ்யதேசத்திற்கே, என்னை விஸ்லேஷாஸஹையான வென்னை, காலம்பெற - சீக்ரமாக; காட்டுமின்கள் - காட்டுங்கோள், திருப்பேரையிலேகொண்டுபோய் விடுங்கோளென்றபடி. ॥௬॥

ப - பேர் - பெரியதான, சதுஸ்ஸஹஸ்ரமானவென்றபடி. எயில் - ப்ராகாரத்தாலே, எயில் - ப்ராகாரம் சூழ் - ஸமிருத்தமான, கடற்றென்னிலங்கை - கடலையுடைத்தான தக்ஷிணதிக்கிலிருக்கிற லங்கையை, ஸமுத்ரத்தை யகழாகவுடைத்தாய் ஸ்வர்க்கம்போலே ஸுலங்காரமான லங்கையிலிருக்கிற ராவணாதிகளையென்றபடி. செற்ற - ஹேதித்தவரான, பிரான் - அத்தாலே ஜகத்துக்கெல்லா முபகாரகனானவன், வந்து - ஆஸ்ரிதர்தேடிக்கொண்டுபோகவேண்டாதபடி தானேகிட்டிவந்து, வீற்று - வீறுபெற்று, விஜயலக்ஷ்மியெல்லாம் ஸாக்ஷாத்காரமாய்த்தோன்றும்படி, இருந்த - எழுந்தருளியிருந்தவிடமான, அவன் ப்ரதிக்ஞைநிரவஹணம்பண்ணிவிட்டாய்த்துவந்திருக்கிறான் "ஸர்வாஸவிஷ்ட்டஜ" என்கிறபடியே பரிசிரமபரிஹாரம்பண்ணப்போகவேணுமென்றுகருத்து. பேரெயிற்கே - திருப்பேரையிலே, புக்கு - ப்ரவேசித்து, நாடி - அவனைத்தேடி, என்னெஞ்சம் - என்னுடைய நெஞ்சானது, பேர்த்து - மீண்டு, எங்கும் - ஒருவிடத்திலேயும், வரக்காணமாட்டேன் - வரும்படிகாணமாட்டுகிறேனில்லை, இனியது வரமாட்டாதென்றுகருத்து. இனி - இப்படிநெஞ்சுவாராதொழிந்தபின்பு. தோழி - என்னோடு ஸதைகவேதியான ஸகியே, இங்கு - இவ்வவஸ்தையிலே, ஆரையுடையம் - ஆரை ஸஹாயமாகவுடையோம், ஒருவரும்ஸஹாயமில்லையென்றபடி. என்னெஞ்சம் - அங்கேபோனவென்னுடைய நெஞ்சை, கூவவல்லாருமில்லை — அழைக்கத்தக்கவருமில்லை, நெஞ்சைத்திருப்பவும் ஒருவராலேயும்ஸக்யமன்றென்றபடி. இனி - இப்படிநெஞ்சுவாராதேபோய், நீயுமென்னைப்போலே ஸாஹசிகையாயிருந்தபின்பென்றபடி. ஆரைக்கொண்டு - எந்தஸஹாயத்தைக்கொண்டு, என் - என்னஸாபேக்ஷத்தை, சாதிக்கின்றது - ஸாதிக்கிறது, இனியிங்கே நமக்கொருஸாபேக்ஷமுமில்லையென்றபடி. என்னெஞ்சங்கண்டதுவே - என்னுடைய நெஞ்சுகண்டவிஷயத்தையே, கண்டேனே - நானுங்கண்டுவிட்டேன். ॥எ॥

மூ—கண்டதுவேகொண்டெல்லாருங்கூடிக்கார்கடல்வண்ணனோடென்திறத்துக்* கொண்டலர்தூற்றிற்றதுமுதலாக்கொண்டவென்காதலுரைக்கிற்றோழி* மண்டிணிஞாலமுமேழ்கடலும்நீள்விசும்புங்கழியப்பெரிதால்* தெண்டிரைசூழ்ந்தவன்வீற்றிருந்ததென்திருப்பேரையிற்சேர்வன்சென்றே* ॥௮॥

ஆ—(கண்டதுவேகொண்டு) ப்ரகாசமானவபிநிவேசம் ஸஹ்யமாயிருக்கச்செய்தே புறம்புதோற்றுகிற ஆகாரத்தையேகொண்டு தத்ஸம்பந்திமாத்ரஜநிதமான வென்னபிநிவேசத்தைக் குற்றமாகவுங்கொண்டு லோகமெல்லாங்கூடி ஒருத்திக்கெம்பெருமான்பக்கலுள்ள அபிநிவேசமே, இப்படியபிநிவேசிக்கைக் குடிப்பழியன்றோ? என்று என்னை யலர்தூற்ற, அதடியாகக்கொண்டு கிளர்ந்தெழுந்த வென்னபிநிவேசத்தின்பெருமை சொல்லநிலமன்று, சொல்லில் தோழி இவ்வஸங்க்யேயமான வண்டங்களும் அளவிறந்ததிருநாடும் நிறையப்பெருகி அதுவுமிடம்போராமை பொங்கிப்பெருகாநின்றது, ஆதலாலவனெழுந்தருளியிருந்த தென்திருப்பேரையிலே நானேயாகிலுஞ்சென்று ஸம்ச்லேஷிக்கை தவிரேனென்கிறாள். ॥௮॥

(சேர்வன்சென்று) இப்போதேதானே எழுந்தருளுகிறானிறே, இப்படி பதறவேணுமோவென்றும் போகைதானுமிடல்லவென்றுந் தோழிமாருமன்னையருஞ்சொல்ல; நீங்களென்னையொன்றுந் தேற்றவேண்டா,

✳ எட்டாம்பாட்டு. ✳

இ— கண்டதுவேகொண்டென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ப்ரகாசமானவித்யாதியால்) கார்க்கடல்வண்ணனோடென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தத்ஸம்பந்தியித்யாதியால்) என்திறத்துக்கொண்டென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னபிநிவேசத்தையித்யாதியால்) உரைக்கிலென்கிற பதத்தாலே ஸூசிதமாகிறவர்த்தத்தை யருளிச்செய்கிறார் (சொல்லநிலமன்றென்று) மண்டிணிஞாலமுமேழ்கடலுமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இவ்வஸங்க்யேயேத்யாதியால்) நீள்விசும்புமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அளவித்யாதியால்) கழியப்பெரிதென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அதுவுமித்யாதியால்) ॥௮॥

✳ ஒன்பதாம்பாட்டு. ✳

நீர்களுரைக்கின்றதென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நீங்களித்யாதியால்) இங்கபிப்ராயம்

ப— தோழி - ஸகியே? கண்டதுவேகொண்டு - வெளியிலேகாணப்படுகிற ஆகாரத்தைக்கொண்டு, உள்ளேயிருக்கிற வென்னபிநிவேசத்தையறியாதேமேல்காணப்படுகிற தத்ஸங்கீர்த்தநாதிவிஷயாகாரத்தைக்கொண்டென்றபடி. எல்லாருங்கூடி - ஸ்நேஹவான்களான தோழிமாரும் ஹிதவான்களானவன்னைமாருமெல்லாரு மேகமாய்க் கூடிக்கொண்டு, கார் - நீலவர்ணமான, கடல் - ஸமுத்ரத்தினுடைய, வண்ணனோடு - வர்ணத்தை யுடையவனோடே, என்திறத்து - என்பக்கலுள்ளத்தை, இங்குதிற சப்தம் திறத்திலே யிருக்கிற வஸ்துவைக்காட்டுகிறது யென்பக்கலுள்ள அபிநிவேசத்தை யென்றபடி. அவனோடெனக்குண்டான வாஸக்த்யதிசயத்தை யென்றபடி. கொண்டு - க்ரஹித்து, அத்தையொரு குற்றமாக க்ரஹித்தென்று தாத்பர்யம். அலர்தூற்றிற்றதுமுதலா - பழிதூற்றினபிதுவேமுதலாக, அலர் - பழி, நீங்கள் திறளாக அபவாதஞ்சொன்னதுவே உத்தம்பகமாகவென்றபடி, கொண்ட - இடங்கொண்டதான, அத்யந்தவ்ருத்தமானதானவென்றபடி. நீங்கள் பேசாதிருந்தீர்களாகில் என்னுடைய அபிநிவேசமளவுபடாதோ வென்றுகருத்து. என்காதல் - என்னுடைய அபிநிவேசத்தை, உரைக்கில் - சொல்லப்புக்கால் மண் - ம்ருத்திகைகளாலே, திணி - திணிந்திருந்ததான, ப்ருதிவ்யாத்மகமானவென்றபடி. ஞாலமும் - ஸமஸ்தலோகமும் - ஏழ்கடலும் - ஸப்தஸமுத்ரங்களும், நீள் - அதிவிஸ்தாரமான விசும்பும் - ஆகாசமும், பரமவ்யோமமுமென்றபடி. கழிய - அதிக்ரமமாம்படி, இவையெல்லாம் அவகாசமாம்படி இவையித்தனையும்விஞ்சியென்றபடி, பெரிது - பெரியதா யிருக்கிறது, ஆல் - விஷாதத்யோதகம். தெண் - தெளிந்ததையான, திரை - தரங்கங்களாலே, தரங்கவதீ ஸமுத்ர தரங்கங்களாலே என்றபடி. சூழ்ந்து - சூழப்பட்டு, அவன் வீற்றிருந்த - அவனெழுந்தருளியிருந்த விடமான, "தமேஸ்யாவநஷ்டம்சேஷ்டா நாநாவஸ்தாஸமயிஷ்டா। விஸ்ருத்யஸ்ரிமுக்திஞா தவாந்கேஸரிவாவிஶ:" என்கிறபடியே கநாவியோக்யமான தேசத்திலேபோய்ப் புகக்கடவேனென்றபடி. தென்திருப்பேரையில் - தக்ஷிணதேசஸ்திதமான திருப்பேரையிலே சென்று சேர்வன் - போய்ச்சேருவேன். ॥௮॥

மூ— சேர்வன்சென்றென்னுடைத்தோழிமீர்காளன்னையர்காளென்னைத்தேற்றவேண்டா* நீர்களுரைக்கின்றதென்னிதற்கென்னெஞ்சுநிறைவுமெனக்கிங்கில்லை* கார்வண்ணன்கார்க்கடல்ஞாலமுண்டகண்ணபிரான்வந்துவீற்றிருந்த* ஏர்வளவொண்கழனிப்பழனத்தென்திருப்பேரையின்மாநகரே* ||௯||

ஆ— போகைக்கு நீங்கள்சொல்லும்விரோதமென்? போனால்வரக்கடவ விரோதமுண்டோவென்றிவள்சொல்ல; உன்னுடைய ஸ்த்ரீத்வாபிஜாத்யாதிகளுக்குப் போராது என்று அவர்கள்சொல்ல, அவனுடைய ஸௌந்தர்ய ஸௌசீல்ய காருண்யாதிகுணங்களாலே என்னுடைய ஸ்த்ரீத்வாபிஜாத்யாதிகள் அபஹ்ருதங்களாயிற்றன, ஆதலால அதிஸ்ப்ருஹமா யதிரமணீயமா யென்னோடு ஸம்ஶ்லேஷிக்கைக்காக அவன்வந்தெழுந்தருளியிருந்த தென்திருப்பேரையிலே சேர்வன்சென்றென்கிறாள். ||௯||

(நகரமும்) அவனெழுந்தருளியிருந்த தென்திருப்பேரையிலே நீயேபோகில் ஊரும்நாடும் மற்றுமெல்லாருமுன்னைப் பழிசொல்லாரோவென்று தோழிமார்சொல்ல, அவர்களையிறே நான் தேடுவதென்றிவள்சொல்ல, பழிசொன்னாலுனக்கு லஜ்ஜையாகாதோவென்று பின்னையுந்தோழிமார்சொல்ல,

இ— மருளிச்செய்கிறார் (போனலித்யாதியால்) நெஞ்சுநிறைவுமில்லையென்கிறவம்ஶம்மேலே உக்தமாயிருக்கையாலே யிங்கத்தைச்சொல்லுகை புநருக்தியன்றோவென்ன விதுக்குத்தாத்பர்யஞ்சொல்லுகைக்காக அவதாரிப்பிக்கிறார் (உன்னுடையஸ்த்ரீத்வாதியால்) கார்வண்ணனென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸௌந்தர்யஶப்தத்தாலே) கண்ணபிரானென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸௌசீல்யஶப்தத்தாலே) கார்க்கடல்ஞாலமுண்டவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (காருண்யாதியால்) நெஞ்சுநிறைவுமெனக்கிங்கில்லையென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னுடையவித்யாதியால்) ஏர்வளவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அதிஸ்ப்ருஹமாயென்று) ஒண்ணென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அதிரமணீயமாயென்று) வந்துவீற்றிருந்தவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னோடித்யாதியால்). ||௯||

* பத்தாம்பாட்டு. *

திருப்பேரைப்போவேனென்று சொல்லாநின்றவிவள் நகரமும்நாடுந்தேர்வேனென்றுசொல்லுகை யஸம்பந்தமன்றோவென்ன விதுக்குத்தாத்பர்யஞ்சொல்லுகைக்காக அவதாரிப்பிக்கிறார் (அவனித்யாதியால்) நகரமுநாடும் பிறவுந்தேர்வனென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவர்களையிறேயித்யாதியால்) என்னெஞ்சங்கவர்ந்தென் றிப்பாட்டிற்சொல்லுகிற விது கீழோடே புநருக்தியன்றோவென்ன விதுக்குத்தாத்பர்யஞ்சொல்லுகைக்காக அவதாரிப்பிக்கிறார் (பழிசொன்னாலித்யாதியால்) மாயன்மகரநெடுங்குழைக்காதனென்

ப— என்னுடைத்தோழிமீர்காள்? - என்னுடைய ஸகிகாள், அன்னையர்காள்?- தாய்மார்காள், என்னை - அங்குப்போகையிலே துணிந்திருக்கிற வென்னை, தேற்றவேண்டா - நீங்களாஶ்வாஸநம் பண்ணவேண்டா, இதற்கு - நானங்கேபோகிறவிதுக்கு, என் - என்னத்தை, என்னவிரோதத்தை, நீர்கள் - நீங்கள், உரைக்கின்றது - சொல்லுகிறது. இதுக்கொரு விரோதமுண்டோ சொல்லுகைக்கென்று கருத்து. நீபோகையுன்னுடைய ஸ்த்ரீத்வாபிஜாத்யாதிகளுக்குவிருத்தமன்றோவென்னில், நெஞ்சும் - மனஸ்ஸும், நிறைவும் - ஸ்த்ரீத்வாபிஜாத்யாதிகுணவத்தியும், எனக்கிங்கில்லை - ஸ்வாதீநம். எல்லாமவனாலே அபஹ்ருதமாயிற்றென்றுகருத்து. கார்வண்ணன் - நீலவர்ணனான, கார்க்கடல் ஞாலமுண்ட - நீலவர்ணமான ஸமுத்ரத்தையுடைத்தான ப்ருதிவியை ப்ரளயத்திலே வயிற்றிலே வைத்துரக்ஷித்தவனான, கண்ணபிரான் - க்ருஷ்ணனாயவதரித்துபகாரகனானவன், என்னுடையநெஞ்சையும் நிறைவையு மபஹரிக்கைக்கிடான ஸௌந்தர்யகாருண்ய ஸௌசீல்யாதிகுணங்களையுடையவனானவனென்று பாவம். வந்து - என்னோடே ஸம்ஶ்லேஷிக்கைக்காக முன்னமேவந்து, வீற்றிருந்த - [illegible]தனைக்கொண்டு வஸிக்கிற இடமான, ஏர்வள - ஏர்களுடைய ஸம்ருத்தியை யுடையவையான, ஏர் - க்ருஷியிலே நியுக்தமான அநட்வாஹஸங்கம், வளம் - ஸம்ருத்தி, ஒண் - ரமணீயங்களான, கழனிப்பழன - கழனிகளையும்பழனங்களையு முடைத்தான, கழனி - க்ஷேத்ரம். பழனம் - நீர்நிலம், தென் - தக்ஷிணதேஶஸ்தமான. திருப்பேரையில்மாநகர் - திருப்பேரையிலாகிற மஹாநகரத்தை, சென்று - போய் - நீங்கள்சொல்லுகிறவார்த்தைக்கு மீளாதே போயென்றபடி. சேர்வன் - அடைவேன், வழியிலே நில்லாதே சேர்ந்துவிடுவேனென்றபடி. ||௯||

பா—நகரமுநாடும்பிறவுந்தேர்வேனுனக்கில்லையென்றோழிமீர்காள்* சிகரமணிநெடுமாடநீடுதென்றிருப் பேரையில்வீற்றிருந்த*மகரநெடுங்குழைக்காதன்மாயநூற்றுவரையன்றுமங்கநூற்ற* நிகரின்முகில்வண்ண னேமியானென்னெஞ்சங்கவர்ந்தெனையூழியானே* ॥ய॥

ஊழிதோறூழியுருவும்பேரும்செய்கையும்வேறவன்வையங்காக்கும்* ஆழிநீர்வண்ணனையச்சுதனையணிகு

ஆ—அவனுடைய நிரதிஶய ஸௌந்தர்யாதி கல்யாணகுணங்களாலுமவனுடைய வாத்ஸல்யாதி திவ்யசேஷ்டிதங்களாலு மென்னுடையநெஞ்சமும்லஜ்ஜையும்வஶ்யமாயெத்தனைகாலமுமுண்டு, ஆதலாலினித் தென்திருப் பேரையிலே நானேயாகிலும்போமத்தனையென்றத்யவஸிக்கிறாள். ॥ய॥

இ—கிறதற்குக் காரணமருளிச்செய்கிறார் (அவனுடையநிரதிஶயேத்யாதியால்) நூற்றுவரையித்யாதி நேமி யானித்யந்தத்துக்குக் காரணமருளிச்செய்கிறார் (அவனுடையவாத்ஸல்யேத்யாதியால்) என்னெஞ்சங்கவர்ந் தெனையூழியான் நாணெனக்கில்லையென்கிற இரண்டுக்குங்கூடக் காரணமருளிச்செய்கிறார் (என்னுடைய நெஞ்சமித்யாதியால்) ॥ய॥

✳ நிகமனம். ✳

ஊழிதோறூழியுருவும்பேருஞ்செய்கையும் வேறவனென்கிறதற்குக் காரணமருளிச்செய்கிறார்

ப— என்தோழிமீர்காள்?- என்னுடைய ஸகிகாள், நகரமும்- நகரங்களையும், நாடும்- ஜநபதங்களையும், பிறவும்- மற்றுமுள்ள ப்ரதேஶங்களையும், உபலக்ஷணயா தத்ரஸ்திதரான ஜநங்களெல்லாரையுமென்றபடி. தேர்வேன் தேடாநிற்கிறேன், அவர்களெல்லாருங்கூடி எனக்குப்பழிசொல்லவேணுமென்று அவர்களைத்தேடா நிற்கிறே னென்றுகருத்து. நீங்களென்னைக் கொண்டுபோ யவனோடே சேர்க்கோளாகில் அவன்தானும் வாரானாகில் இனியவனோடே யென்னைக்கூட்டிப் பழிசொல்லுவாருடையவாக்குகளாகிறவஸ்த்ரங்களைக்காதாலேவாநம்ப ண்ணியிறே யெனக்குப்ப்ராணதாரணம்பண்ணவேண்டுமென்றுகருத்து. அவர்கள்பழிசொன்னாலுனக்குலஜ்ஜை யாகாதோவென்னில்? நாணெனக்கில்லை- லஜ்ஜையெனக்கில்லை, நாண் - லஜ்ஜை. என்னையவனோடேகூட்டிச்சொல்லு கிற பழிகளைக் கேட்கையே யெனக்குப் ப்ராணதாரகமானபின்பு லஜ்ஜைக்கு ப்ரஸக்தியுண்டோவென்று க ருத்து. இவ்வளவேயன்று, சிகர - ஶிகரங்களை யுடையவையான, மணி - ரத்நமயங்களான, நெடு - உந்நத ங்களான, மாட - ஸௌதங்களையுடைத்தான, நீடு - தீர்க்கமான, சிரகாலஸ்தாயியான என்றபடி. தென் - தக்ஷி ணதேஶஸ்திதமான, திருப்பேரையில் - திருப்பேரையென்கிற திவ்யநகரத்திலே, வீற்றிருந்த - ஸவைபவனாக வெழுந்தருளி யிருந்தவனான, மகர - மகரத்தை யுடைத்தான, மகராகாரங்களான ஆபரணங்களை யுடை த்தான, நெடும் - தீர்க்கங்களான, உஜ்ஜ்வல காந்திகளான என்றபடி. குழைக்காதன் - பாஶாகா ரங்களான கர்ணங்களை யுடையவனான, மாயன் - இவ்வவயவ ஶோபைகளாலே ஆஶ்சர்யபூதனான, அ ன்று - அந்த பாரதயுத்த ஸமயத்திலே, நூற்றுவரை - ஶதஸங்க்யரான துர்யோதநாதிகளை, மங்க- நஶிக் கும்படி, நூற்ற - ஸங்கல்பித்தவனான, நூற்கை - ஸங்கல்பம்பண்ணுகை, நிகரில்- ஸத்ருஶரில்லாதவரான, மு கில் வண்ணன் - மேகவர்ணனான, ஆஶ்ரித ப்ராப்திகாரண ப்ரகாஶத்தாலே உஜ்ஜ்வலனான என்றபடி, நேமியான்- சக்ரயானவன், ஆஶ்ரித ஸம்ரக்ஷணார்த்தம் பகலை இரவாக்கும் ஸ்ரீஸுதர்ஶநத்தை யுடையவனான ஸ் வகாரகன், என்னெஞ்சங்கவர்ந்து - என்னுடைய மநஸ்ஸை யபஹரித்து, எனையூழியான் - எத்தனையோ கல்பத்தையுடையவன், அநந்தகாலத்தையுடையவனென்றபடி. அவனென் மநஸ்ஸை யபஹரித்துக்கொண் டுபோய் அநந்தகால மாயிற்றென்றுகருத்து. ॥ய॥

ஈ ஊழிதோறூழி - ஊழியூழி தோறுமென் றந்வயிப்பது. கல்பங்கல்பந்தோறுமென்றபடி. உருவும் - ரூபங் களும், பேரும் - திருநாமங்களும், செய்கையும் - திவ்யசேஷ்டிதங்களும், வேறவன் - வேறாக வுடையவனைக் கொண்டு, ராமக்ருஷ்ணந்ருஸிம்ஹாதிரூபவைலக்ஷண்யநாமவ்யாபாரங்களை யுடையவனைக்கொண் டு, வையம் - ஸமஸ்தலோகங்களையும், காக்கும் - ரக்ஷிக்கும்ஸ்வபாவனான, ஆழிநீர்வண்ணனை- ஸமுத்ரஜலம் போலே ஶ்யாமமானவர்ணத்தையுடையவனான, ஆழி - ஸமுத்ரம். ரக்ஷியாதேயுபேக்ஷகனாயிருந்தாலும் விட வொண்ணாதபடியான வடிவழகை யுடையவனான வென்றபடி. அச்சுதனை, ஆஶ்ரிதரைக் கைவிடாதவனானவனை அணி- அலங்காரமான, ஜகத்துக்கெல்லாமலங்காரமாயிருக்கிற என்றபடி. குருகூர் - திருநகரியி லிருக்கிற,

மூ—ருகூர்ச்சடகோபன்சொன்ன* கேழிலந்தாதியோராயிரத்துள்ளிவைதிருப்பேரையின்மேயபத்து* ஆழியங்கையனையேத்தவல்லாரவரடிமைத்திறத்தாழியாரே* ஆழ்வார்திருவடிகளேசரணம். ॥௧௧॥

ஆ—(ஊழிதோறூழி) ப்ரதிபாதம் ஹிநுபநிவநாசம் வஷிதனைக்கொண்டு ஸ்வாஸ்யாரண தீவ்ரா வேணாவதீர்ணனாய் ஆச்ரிதரை ரக்ஷித்தருளும்ஸ்வபாவனாயிருந்த வச்சுதனை யணிகுருகூர்ச்சடகோபன்சொன்ன ஸகலசாஸ்த்ரங்களாலும் நிர்வாஹமாயிருந்த திருவாய்மொழியில் தென்திருப்பேரையைச்சொன்ன இத்திருவாய்மொழியைக்கொண்டு அவனுடைய திருவாழியுங்கையுமாயிருக்குமழகை யேத்தவல்லார் திருவாழிபோலொக்கவடிமைசெய்யப்பெறுவாரென்கிறார். ॥௧௧॥ திருக்குருகைப்பிரான்பிள்ளான் திருவடிகளேசரணம்.

இ—(ப்ரதிக்ஷணமபிநவதயா) ஆழிநீர்வண்ணனையென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸ்வாஸ்யாரணதயா) வையங்காக்குமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆச்ரிததயா) இவ்வளவாலே ஸ்வாச்ரிதர்க்குத் தன்னுடைய சௌலப்யத்தைத்தானே ப்ரகாசிப்பிக்குமென்கிற ஸங்க்ஷேபணம் இத்திருவாய்மொழிக்கு ப்ரதிபாத்யமென்று ஸித்தமாயிற்று. கேழிலென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸகலதயா) ஆழியங்கையனையேத்தவல்லாரவரென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவனுடையதிருவாழியுமிதயா) அடிமைத்திறத்தாழியாரென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (திருவாழியோடிதயா),

ஶ—சடகோபன் சொன்ன - ஸ்பஷ்டம். கேழில் - ஸத்ருசரஹிதமான, கேழ் - ஸத்ருசம், அந்தாதி - அந்தாதிரூபமான, ஓர் - விலக்ஷணமான, ஒருபடியான மொப்பில்லாததான என்றபடி. ஆயிரத்துள் - ஸஹஸ்ரத்தில் திருப்பேரையில் மேய - திருப்பேரையின் மேலேசேர்ந்த, தத்விஷயமான என்றபடி. இவைபத்தும் - இந்த பத்து பாட்டுக்களையும்கொண்டு, ஆழியங் கையனை - ஸ்ரீஸுதர்சநத்தாலே அழகியதான கையையுடையவனை, ஏத்தவல்லாரவர் - ஸ்தோத்ர ஸமர்த்தரானவர்கள், அடிமைத் திறத்து - கைங்கர்யவிஷயத்திலே, ஆழியார் - ஸுதர்சநாழ்வார்கள், ஸ்ரீஸுதர்சநாழ்வானைப் போலே அநவரத கைங்கர்யங்கள் பண்ணப் பெறுவரென்றபடி, ॥௧௧॥ ஜ்ஞாநவைராக்யநிதிஷ்டாநமேவயி ஸ்ரீமதேஜ்ஞாநராமாநுஜமஹாதேசிகாய நம:.

ஸ்ருதிஶோவநிஷத்தாத்பர்யாவலி:. (வெள்ளைச்சுரிசங்கு.)

பத்மாக்ஷஸ்தநஸஹ்யஸ்வ:ஸ்வாமிவைநிருபமஸ்வாவகாரீவிமஜீ
தம்போஜநிஷ்ப்ரஹத்ர்ராவிலஸநக்ஷ்ப்ரஸோகாம்போயிஷ்டிஸ்ய: ।
ஸ்வஜஸ்ஸம்ரக்ஷக: ஸ்ரீமகரவரஸக்காம்பவ:ஸ்வாமகாந்த்யா
வைஷ்ணவம்போவ்யஹாவம்ப்ரகடபதிஹரிஸூத்ரஸம்ஸம்ராம: ॥௮௩॥

(பத்மாக்ஷஸ்தநஸஹ்யஸ்வ:) தாமரைக்கண்ணனென்னெஞ்சினூடே - ஸர்வஜனஸ்த்ருசநயனனைக்கொண்டு ஹ்ருதயத்திலே ப்ரகாசிக்குமவனாய், (ஸ்வாமிவைநிருபம:) வானப்பிரான் - வாமநநிருபமனுமாய், (ஸ்வாவகாரீ) தென்திருப்பேரையில் வீற்றிருந்த நங்கள்பிரானுக்கு - ஆச்ரிதார்த்தமாகத் தென்திருப்பேரையிலே வந்து வீற்றிருந்துபகரிக்குமவனாய், (விமஜீதம்போஜ:) முழுநீர்முங்கக்கையன் - அநேகபேர்வாழவும் ப்ரதிகூலர்நடுங்கவும் முழங்காநிற்கிற ஸ்ரீபாஞ்சஜந்யத்தையுடையனுமாய், (நிஷ்ப்ரஹத்ர்ரா) முனிந்து சகடமித்யாதி - சகடாஸுரநிரஸந வத்ஸநாநாமந யமளார்ஜுநபஞ்ஜநாதிகளைப் பண்ணுமவனாய், (விலஸநக்ஷ்ப்ர) காதல்கடலின்மிகப்பெரிதால் - ஆச்ரிதர்க்குத்தன்னிடத்திலே ஸ்நேஹத்தைவர்த்திப்பிக்குமவனாய், (ரக்ஷக:) பேரையில்சூழ்கடலித்யாதி - அவதரித்தருளி விரோதிநிரஸனம்பண்ணி ஸகலலோகங்களுக்கு ரக்ஷகனுமாய், (அம்போயிஷ்டிஸ்ய:) கார்க்கடல்வண்ணனோடென் திறத்து - கடல்போலே ச்யாமளமான வடிவையுடையவனுமாய், (ஸ்வஜஸ்ஸம்ரக்ஷக:) கார்க்கடல்ஞாலமுண்ட கண்ணபிரான் - ப்ரளயாபத்திலே யெல்லாரையும் திருவயிற்றிலேவைத்து ரக்ஷிக்குமவனாய், (ஸ்ரீமகரவரஸக்காம்பவ:ஸ்வாமகாந்த்யா) மகரநெடுங்குழைக்காதன்மாயன் - மகரஸத்ருசமாய்த் திருமேனிகாந்தியாலே விளங்காநிற்கிற திருக்காதுகளையுடையனுமாயிருக்கிற தென்திருப்பேரையிலெம்பெருமான் ஸ்வாச்ரிதவிஷயத்திலே தன்னுடைய ரக்ஷகத்வத்தை ப்ரகாசிப்பியாநிற்கிறானென்று "வெள்ளைச்சுரிசங்கு" என்கிறதசகத்திலே யாழ்வார் வெளியிட்டருளினாரென்கிறார். ॥௮௩॥

ஸ்ரீமதேநிகமாந்தமஹாதேசிகாய நம:.

ஏழாம்பத்தில் மூன்றாந்திருவாய்மொழிமுற்றிற்று.

# நாலாந் திருவாய்மொழி.

மூ— ஆழியெழச் சங்கும் வில்லுமெழத் திசை* வாழியெழத் தண்டும் வாளுமெழ அண்டம்* மோழையெழ முடிபாதமெழ அப்ப* னூழியெழவுலகங்கொண்டவாறே* ௧

ஆ— (ஆழியெழ) இப்படி தென்திருப்பேரையிலே தாமே போக வ்யவஸித்திருந்த ஸமயத்திலே "யேநா க்ராந்தமிதம் ஸர்வம் த்ரைலோக்யம் ஸசராசரம் । தஸ்யாஸமர்த்தி ஸாக்ஷிதா நாவிஜிதம் பதம் ॥ ஸாப்ரா ஸாக்ஷாந்நாராயண கால்ஜேநாமிதேநவா । ஸராக்ஷஸஜநஸ்த்ரைலோக்யம் ஸபலம் வியுக்தி" என்னும் ப்ரக்ரியையாலே தென்திருப்பேரையிலே ஸ்வபாவமாக வெழுந்தருளின பெரியபெருமாள் விஜயைகவ்யஸநிவ்ருத்தனைக் கொண்டெழுந்தருளினபடியைக் கண்டு நிரதிசயப்ரீதியுக்தராய் ஸஹ்ருதரோநஸராய்க்கொண்டு "தம்த்ருஷ்ட்வா ஸத்ருஹந்தாரம் மஹர்ஷிணாம் ஸுகாவஹம் । பபூவ ஹ்ருஷ்டா வைதேஹீ பர்த்தாரம் பரிஷஸ்வஜே" என்னும் ந்யாயத்தாலே ப்ரதிகூலநிரஸந ஜநிதஸ்ரமத்துக்கு ஶிஶிரோபசாரமாகப் பெரியபெருமாளோடே ஸம்ஶ்லேஷித்து தத்விஜய வைஷ்ணங்களைச் சொல்லி என்னப்பன் செய்தருளினபடியென்? பிரான் செய்தருளினபடியென்? என்று அநுபவிக்கிறார், வதாநுக்ருஹாநமுகங்களான ஸமஸ்தங்களிலும் ஸர்வஜ்ஞனை ஸ்ப்ருஹணீயமென்னும்படி விஶேஷிதமாக ஸம்பந்தி திவ்யாயுத திவ்யாவயவங்களைக் கொண்டு என்னப்பன் உபகாரவைசிஷ்ட்யத்து லோகத்தையளந்து

நாலாந்திருவாய்மொழி.

இ— இப்படி விரஹாதுரராய் இப்போதே தென்திருப்பேரையிலேபோய் அவனோடே ஸம்ஶ்லேஷிக்கவேணுமென்றலற்றின வாழ்வார் அநந்தரமித்திருவாய்மொழியிலே யவனுடைய வைசித்ரகாரேந யநாதிவிஜயவிருத்தங்களைப் பேசுகையன்றோ தமன்றோ வென்ன? வதரிப்பிக்கிறார் (இப்படிஉத்யாதியால்) கீழ்த்திருவாய்மொழியிலே பாஹ்யஸம்ஶ்லேஷாபாவத்தாலே வந்த வைலக்ஷண்யத்தாலே ஞானஸாக்ஷாத்காரமும் கலங்கித் தென்திருப்பேரையிலேபோக வ்யவஸித்த விவருடைய வார்த்தையைக்கண்டு பெரியபெருமாளிவர்க்குத் தாம் விஜயைகவ்யஸநிவ்ருத்தனைக்கொண்டெழுந்தருளுகிறபடியை ப்ரத்யக்ஷவிஶதமாக ஸாக்ஷாத்கரிக்கும்படி பண்ணியருள அத்தாலே ப்ரஹ்ருஷ்டரா யிப்படிபேசுகிறாரென்றபடி.

முதற்பாட்டு

திசைவாழியெழவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (வதாநுக்ரஹேத்யாதியால்) அண்டம்மோழையெழவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸ்ப்ருஹணீயேத்யாதியால்) முடிபாதமெழ ஆழியெழச்சங்கும் வில்லுமெழத் தண்டும் வாளுமெழவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸம்பந்தீத்யாதியால்) உலகங்கொண்டவாறேயென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னப்பன் உபகாரவைசிஷ்ட்யேத்யாதியால்)॥

ப— திசை - திக்குகளிலே, ஸர்வதிக்குகளிலேயு மென்றபடி. வாழி - மங்களாஶாஸநமானது, எழ - கிளம்பாநிற்க, தேவர்ஷி மஹர்ஷி ஸநகாதிகளுடைய வாழி வாழியென்றுப்போலே சொல்லுகிற மங்களாஶாஸந த்வநிகள் திக்குகள்தோறுங் கிளம்பாநிற்கவென்றபடி. எழுகை - கிளம்புகை, அண்டம்மோழையெழ முடிபாதமெழ - அண்டம்குமிழி கிளம்பும்படி முடியும் பாதமும் வளராநிற்க, மோழை - குமிழி. திருமேனிவளர்த்திக்கு அண்டாவகாஶம் போராமையாலே நெருங்கிப் பேதித்துப் பிளந்து ஆவரணஜலமுள்ளே புகும்படி திருமுடியும் திருவடிகளும் வளராநிற்க வென்றபடி. ஆழி- ஸுதர்ஶநம்' எழ - ப்ரகாஶியாநிற்க, வாமநன் வளரத்தொடங்கினவாறே உபகாரவைசிஷ்ட்யத்தினுடைய ஸ்தூலரான அஸுர வீரர்கள் மேல்விழப்புகுகிறாரென்று ஸஹஸ்ராதித்ய ஸங்காஶமான திருவாழியாழ்வான் ஸஹஸ்ரமாகத் திருக்கையிலே வந்தேறி யாதவஜ்வாலைகளால் ஸகல ஸத்வாந்தகர்களைக் கொண்டு அண்டமெல்லாம் நிறையும்படி ப்ரகாஶியாநிற்கவென்றபடி. சங்கும்வில்லுமெழ - பாஞ்சஜந்யமும் ஶார்ங்கமும் ப்ரகாஶியாநிற்க, தண்டும்வாளுமெழ - கதையும்வாளும் ப்ரகாஶியாநிற்க, ப்ரதாநமான ஸ்ரீஸுதர்ஶநாழ்வான் முன்னே கிளம்பப் பின்னையேதுர்வாளுஞ ந்யுமும் ஶாரங்காதிகளும் ப்ரகாஶியாநிற்கவென்று பாவம். ஊழி - காலமானது, எழ - ப்ரகாஶிக்கும்படி, உபகாரவைசிஷ்ட்யத்தாலே வீணேபட்ட காலம் போய் நல்ல காலமாம்படி யென்கை. அப்பன் - உபகாரகனான ஸர்வேஶ்வரன், உலகங்கொண்டவாறே -

ஸ்ரீ:.

த்ரமிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளீ:.

(மாயக்கூத்தா.)

ஸ்ப்ருஹ்யைர்வேஷைர்நிகமஶாதோத்கோடீபாஸ்வாரூடோப்தௌஶயிதாஸ்!
ஜீமூதஶ்யாமளாங்கஸ்ஸ்ரீதஸாஹாய்யதயாபத்மஸம்பந்நிபாங்கஸ்
ஸாரத்யாத்ஸ்வாமிபாவாதவநிபரஹ்ருதேஸ்ஸர்வாந்தஸ்யோமாஸ்
ஜீவாபேக்ஷாப்ரதீக்ஷாமவதி தவநெஜஸ்ரீவதிஸ்வ க்ருஹாணி ॥௬௬॥

(ஸ்ப்ருஹ்யைர்வேஷைஸ்) மாயக்கூத்தாவாமனா - ஸ்ப்ருஹணீயங்களாய் தோஷஹாநிகளான வேஷங்களையுடையனாகையாலும், (ஶாதோத்கோடீரபா) சுடர்க்கோதிமுடிசேர் சென்னியம்மானே - நிரவதிகதேஜோரூபமான திருவபிஷேகத்தையுடையனாகையாலும், (ஸ்வாரூட:) முடிசேர்சென்னியம்மான் - அத்திருவபிஷேகத்தாலே ஸர்வஸ்வாமித்வந்தோற்ற நிற்கையாலும், (அப்திஶயிதாஸ்) தூநீர்கடலுள் துயில்வானே - ஸமுத்ரஶயனமான பர்யங்கத்திலே கண்வளர்ந்தருளுகையாலும், (ஜீமூதஶ்யாமளாங்கஸ்) மாநீர்க்கொண்டல் வண்ணனே - நீலமேகநிபமான திருநிறத்தையுடையனாகையாலும், (ஸ்ரீதஸாஹாய்யதயா) கொண்டல்வண்ணா குடக்கூத்தா - க்ருஷ்ணனாயவதரித்து ஆஶ்ரிதர்க்கு ஸாஹாய்யம்பண்ணியிருக்கையாலும், (பத்மஸம்பந்நிபாங்கஸ்) செந்தண்கமலக்கண்கைகாலித்யாதி - செந்தாமரைப்பூத்தாப்போலேயிருக்கிற திருக்கண்மலரையும், திருக்கைகளையும், திருவடிகளையும், நிரவதிகஸௌந்தர்ய நீலஸம்பந்நிபமான திருமேனியையுமுடையனாகையாலும், (ஸாரத்யாத்ஸ்வாமிபாவாத்) தக்கவைவர்தமக்காயித்யாதி - ஆஶ்ரிதனான அர்ஜுனனுக்கு ஸாரத்யத்தைப்பண்ணுகையாலும், (அவநிபரஹ்ருதே:) இம்மானுடம்பொறைதீர்ப்பான் - வடமதுரையிலேவந்தவதரித்து ப்ருதிவியினுடையபாரத்தை அபஹரிக்கையாலும், (ஸர்வாந்தஸ்யோமாஸ்) கறந்தபாலுள்நெய்யேபோலிவற்றுளெங்குங்கண்டுகொள் - க்ஷீரத்திலே ஸர்பிஸ்ஸிருக்கிறாப்போலே எல்லாவஸ்துக்களிலும் ஆத்மதயா நிற்கையாலும், எம்பெருமான் ரக்ஷிக்குமிடத்தில் சேதநருடைய அபேக்ஷாப்ரதீக்ஷனாயிருக்கிறானென்று "மாயக்கூத்தா" என்கிறதஶகத்திலே மாறன் அருளிச்செய்தாரென்கிறார். ॥௬௬॥

ஸ்ரீமதே நிகமாந்தமஹாதேஶிகாய நம:.

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

எட்டாம்பத்தில் ஐந்தாந்திருவாய்மொழிமுற்றிற்று.

❦ ✳ ❦

# ஆறாந்திருவாய்மொழி.

ஆ—(எல்லியுங்காலையும்) எம்பெருமானெனினுடைய விடாயெல்லாந்தீரும்படி யருள்செய்தருளினான். ஒருவன் செய்தருளினபடியேயென்றென்று நினைத்துக்கிடக்கும்படி யருள்செய்தருளினான்; அவ்வருள்தானென்றால்

## ❦ ஆறாந்திருவாய்மொழி. ❦

### ❦ முதற்பாட்டு. ❦

இ— நல்லவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (விடாயெல்லாந்தீரும்படியென்று) ஹ்ருதயவாக்யத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஒருவனித்யாதிபால்). பாட்டில்வஸ்துவாய் ஏகவாக்யமாயிருக்க தத்வ்யாக்யானம் வாக்யபேதமாய் ப்ரவர்த்தித்தது அருள்நல்லதென்றும் அது யாவத்காலநாஶமென்று மிவ்வர்த்தத்திலும் இப்பதத்துக்குத் தாத்பர்யமென்று வ்யஞ்ஜிப்பிக்கைக்காக. பாஹ்யஸம்ஶ்லேஷாபேக்ஷையாலே க்ருதஜ்ஞராயிருந்த வாழ்வார் நல்லவருளென்றும் யாவத்காலநாஶமென்று மித்தனை கொண்டாடுகைக்கு விஷயம் திருக்கடித்தானத்தில் ஸம்ஶ்லேஷித்தமாக மாட்டாமையால் இவ்வுத்தரார்த்தம் ஸம்மதமன்றோவென்று ஶங்கிக்கிறார் (அவ்வருளித்யாதிபால்) எதுவென்றது க்ஷேமஹேதுமான [illegible], திருக்கடித்தானத்தில் ஸம்ஶ்லேஷிதம் ஸர்வவிஷய விஷயமாகாதென்று க்ஷேமதீக்ஷம்; இவ்வர்த்தம் ஸம்மதமாம்படி இதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார்

மூ— எல்லியுங்காலையுந்தன்னைநினைந்தெழ* நல்லவருள்கணமக்கேதந்தருள்செய்வா* னல்லியந்தண்ணந்துழாய்முடியப்பனூர்* செல்வர்கள்வாழுந்திருக்கடித்தானமே* ॥க॥

ஆ— முன்னம்திருக்கடித்தானத்திலே வந்துபுகுந்தருளினனென்கிறார். ॥க॥
(திருக்கடித்தானமும்) பின்னையுஞ்செய்தருளுகிறான், திருக்கடித்தானத்தையும் என்னெஞ்சையுமொக்க,

இ—(முன்னமித்யாதியால்) முன்னமென்றதுக்குமேல்பாட்டுக்களி லருளிச்செய்யப்புகுகிற அநுக்ரஹவிசேஷங்களுக்கும் மேல்த்திருவாய்மொழியில் அருளிச்செய்யப்புகுகிற ஸம்ச்லேஷத்துக்கும் முன்னமென்றுகருத்து. இப்படி திருக்கடித்தானத்தில் அவன்வந்துநிற்கிறவிது பஹுவிதாநுக்ரஹஸாத்யக ஸம்ச்லேஷவிசேஷ ப்ரதாநஸமமாயிருக்கிறதாகையாலே இது ஆழ்வார்க்கிப்போது மிகவும் ச்ராவணவிஷயமாகவற்றுகையாலிவ்வுத்தரார்த்தம் ஸங்கதமென்றதாயிற்று. இத்தாலித்திருவாய்மொழிக்கு ஸங்கதி ஸூசிதையாயிற்று. எங்ஙனேயென்னில்? மாயக்கூத்தனிலாழ்வாருடைய ஆர்த்த்யுக்தியைக் கேட்டு தத்ஸ்வபாவருடைய ஆர்த்தி தீரும்படி ஸம்ச்லேஷித்தருளுகைக்காக வருகையிலே உத்யுக்தனானவெம்பெருமான் இனி நாம் கடுகச்சென்றக்காட்டில் ஸம்ச்லேஷஜநிதப்ரீதிவேகத்தாலே தடுமாறி யழியும்படியாய்ப் படுவாராகையாலே ப்ரீதியைஸாத்மிப்பித்துப் பின்பு ஸம்ச்லேஷிக்கவேணுமென்று பார்த்து பதினாலாண்டு பிரிவாலேநொந்த ஸ்ரீபரதாழ்வானுக்குத் தாமெழுந்தருளின ப்ரீதி ஸாத்மித்தபின்பு திருவயோத்யையிலே புக்கருளுகைக்காகத் திருவடியை முற்படப்போகவிட்டு பெருமாள்தாம் ஸ்ரீபரத்வாஜாச்ரமத்திலே விட்டிருந்தருளினப்போலவும், ஸ்ரீவஸுதேவர்திருமகன் தூதுஎழுந்தருளுகிறபோது ப்ரஹ்மவாதரான ஸ்ரீவிதுராதிகளுக்குத் தானெழுந்தருளின ப்ரீதிஸாத்மித்தபின்பு ஹஸ்திநாபுரத்திலே புக்கருளுகைக்காக "குசஸ்தலேநிவஸதிஸப்ராதரிஹைஷ்யதி" என்கிறபடியே குசஸ்தலத்திலே விட்டருளியிருந்தாப்போலவும் ஆழ்வாருக்குத் தானெழுந்தருளின ப்ரீதிஸாத்மித்தபின்புவந்து ஸம்ச்லேஷிக்கைக்காகத் திருக்கடித்தானத்திலே வந்துபுகுந்தருளி யிவர்பக்கல் அதிவ்யாமோஹமாயிருக்கிறபடியை யிவரநுஸந்தித்து ப்ரீதராய் இதைப்பேசி அநுபவிக்கிறாரென்று இங்கேஸங்கதமாகிறது. இத்தாலித்திருவாய்மொழிக்கு "ஸவிதாரணஸஜ்ஜஸ்" மென்கிறஸமயவசநம் ப்ரதிபாத்யமென்றதாயிற்று. ॥க॥

*இரண்டாம்பாட்டு.*

திருக்கடித்தானத்திலிருப்பை யிப்பாட்டிலுஞ்சொல்லுகை புநருக்தமன்றோவென்ன விங்கு தபோதாதிசயமான அநுக்ரஹவிசேஷத்தைச்சொல்லுகையிலே தாத்பர்யமென்றுகாட்டுகிறார் (பின்னையுமித்யாதியால்) (செய்தருளுகிறான்) ஒருஅநுக்ரஹவிசேஷத்தைஉக்திசேஷ: உமக்கு ப்ரதிவம்யங்கள் அநேகங்

ப— அல்லியம்- புஷ்பங்களாலே அழகியதான, அல்லி- புஷ்பம், புஷ்பராகமாநஷகதயா அதிஸுந்தரமான வென்றபடி. தண்- சீதளமான, அம்- ஸுதர்சநீயமான, துழாய்- திருத்துழாயை, முடி- திருமுடியிலே யுடையவனான, அப்பன்- ஸ்வாமியானவன், கீழ்த்திருவாய்மொழியிலே "மொய்பூந்தாமத்தண்டுழாய் கடிசேர்கண்ணிப் பெருமானே" என்றுநானசைப் பட்டபடியேவந்து தோற்றின ஸ்வாமியானவனென்றபடி. எல்லியும்- ராத்ரியும், காலையும்- பகலும், ஸர்வகாலமு மென்றபடி. தன்னை- என்பக்கல் நிர்ஹேதுகமான ஸௌஹார்த்தத்தைப்பண்ணின தன்னை, நினைந்து- இதென்ன ஸௌஹார்த்தமென்று விஸ்மயாவஹனைப் ஸ்மரித்துஸ்மரித்து, எழ- எழும்படி, உஜ்ஜீவிக்கும்படியென்கை. நல்ல- நல்லவையான, என்னுடைய விடாயெல்லாந்தீரும்படியான என்றபடி. அருள்கள்- க்ருபைகளை, நமக்கே- மற்றொருவருக்குக் கிடையாதபடி நமக்கே அஸாதாரணமாக, தந்து- ப்ரஸாதித்தருளி, க்ருபாகார்யங்களைச் செய்தருளியென்றபடி. அருள்செய்வான்— மேல்இடைவிடாதே க்ருபாகார்யங்களைச் செய்தருளாநிற்கிறான், ஊர்- இப்படி உபகாரியாயிருக்கிறவ னெழுந்தருளியிருக்கிற திவ்யநகரம், செல்வர்கள் வாழும் திருக்கடித்தானம்- ஸ்ரீமான்கள் வாழ்கிற திருக்கடித்தானம், "லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம்பந்ந:" என்கிறபடியே கைங்கர்யஸம்ருத்தமான ஸம்பத்தையுடையவரான ஸ்ரீவைஷ்ணவர்கள் ஸமயநுஸார கைங்கர்யங்களாலே நித்ய ஸ்ரீமான்களாய் வஸிக்கிற திருக்கடித்தான மென்றபடி. ॥க॥

மூ — திருக்கடித்தானமுமென்னுடைச்சிந்தையு* மொருங்கடுத்துள்ளேயுறையும்பிரான்கண்டீர்* செருக்கெடுத்தன்றுதிகைத்தவரக்கரை* யுருக்கெடவாளிபொழிந்தவொருவனே* ॥உ॥
ஒருவரிருவரோர்மூவரெனநின்* றுருவுகரந்துள்ளுந்தோறுந்தித்திப்பான்* திருவமர்மார்பன்திருக்கடித்தானத்தை* மருவியுறைகின்றமாயப்பிரானே* ॥௩॥

ஆ — தனக்கிருப்பிடமாகக்கொண்டருளினான். அவனாரென்னில்? செருக்கெடுத்தன்றுதிகைத்தவரக்கரை யுருக்கெடவாளிபொழிந்த அத்விதீயன், கண்டீரென்கிறார். ॥உ॥

(ஒருவர்) பின்னையுமொருவரா யிருவராய் மூவராய்த்தோன்றி உருவுதெரியாதபடிவந்து வாளிபொழிந்தவனென்று அவன்சிகலையே யநுபவித்து அதுக்குமேலே இன்றுதிருக்கடித்தானத்திலு மென்னெஞ்சிலும்

இ — களாயிருக்க இப்படி யநுபவிக்கமாட்டானென்கிற அதிசங்கையைக் காட்டுகிறார் (அவனாரென்னிலென்று) ஆரென்றுக்ஷேபாக்ஷேபம். ஒருவனுமாகமாட்டானென்றபடி. ராவணாதிநிரஸநம்பண்ணின மஹாவீரனாகையாலே என் ப்ரதிபந்தகங்களையும் நிச்சேஷமாக்கினானென்கிறாரென்று நினைத்தருளிச்செய்கிறார் (செருக்கெடுத்தித்யாதியால்) ॥உ॥

✳ மூன்றாம்பாட்டு ✳

உபாயாந்தரஜ்ஞத்வாதுமாகையாலே "வசிஷ்டவாமதேவௌ ப்ராஜநைவாராசிவாஸிநம்" என்கிறபடியே யாழ்வாரை மேல்போகவொட்டுகிறதில்லையென்று நினைத்தருளிச்செய்கிறார் (பின்னையுமித்யாதியால்) பின்னையுமென்கிறதற்கு அநுபவித்துஎன்கிறதோடேயந்வயம். திருக்கடித்தானத்தில் திவ்யமங்கலவிக்ரஹமொன்றேயாயிருக்க இருவர்மூவரென்கையும் அதிப்போது அநுபவமொவாரமாயிருக்க உருவுகரந்து என்கையும் ஸங்கதமல்லாமையால் கீழ்ச்சொன்ன வாளிபொழிந்தவமயத்திலே இதுக்கந்வயமாகவேணுமென்று நினைத்தருளிச்செய்கிறார் (வந்தித்யாதியால்) சிகலை - வ்யாபாரத்தை, கீழ்ப்பாட்டிற்சொன்னதில்க்காட்டில்

ரா — செருக்கு- மதம், எடுத்து- தலையெடுத்து, உத்கடமாயென்றபடி. பரபலஹராஜபலஸம்ருத்தாலே மதஉபசிதமாயென்கை. திகைத்த- ஜோஹித்தவரான, சக்ரவர்த்தித்திருமகனை ஜயிக்கலாமென்று ப்ரமித்த மதிகேடரான வென்றபடி. அரக்கரை- ராக்ஷஸர்களை, ராவணாதிகளைக்குறித்து என்றபடி. இதுக்குப்பொழிந்தவென்கிறத்தோடே யந்வயம். அன்று - அக்காலத்தில், ரிஷிகணாபஹிவக்ஷணன தன்திருவுள்ளத்திலும் நீரிலேநெருப்பெழுந்தாப்போலே சிற்றம்விளையும்படி அவர்கள் அபசாரங்களைப்பண்ணின அந்தகாலத்திலே, உருக்கெட - ரூபங்கெடும்படி, "பிஹம்பிஹஸமெரிதம்" என்கிறபடியே யவர்கள்ஸரீரங்களழியும்படியென்கை. வாளி - பாணங்களை, பொழிந்த - "ஸரவர்ஷம்வவர்ஷஹ" என்கிறபடியே வர்ஷித்தவனை, ஒருவன்கண்டீர் - ஏகவீரன்கண்டீர், கண்டீரென்றது ஸகலப்ரதிபந்தகநிவர்த்தநஸாமர்த்யத்யோதகம். திருக்கடித்தானமும் - அந்ததிவ்யதேசத்தையும், என்னுடைச்சிந்தையும் - என்னுடையசித்தத்தையும், ஒருக்க - ஒருபடிப்பட, எடுத்து - ஸ்வீகரித்து, இரண்டையும்ஏகரூபமாக அபிமானித்தென்றபடி. இரண்டிலுமேகரூபமாக ஆஸக்திசெய்தருளியென்கை. உள்ளே - இவற்றுக்குள்ளே, உறையும்பிரான் - வஸியாநிற்கிறஉபகாரகன். ॥உ॥

ரா ஒருவர் இருவர் ஓர்மூவரெனநின்று - வேகவத்தோடு யுத்தம்பண்ணியருளுகிறபோது ப்ரதமமொருவராய், பின்பு வேகயாதிஸயம் விஞ்சவிஞ்ச இருவர்மூவரென்னும்படிநின்று, அநேகரூபனாய்த்தோன்றி என்றபடி. உருவுகரந்து- அதிதீக்ஷ்ணமான ரூபம்மறைந்து, லக்ஷ்யாலக்ஷ்யஸம்யோகத்துக் கவகாசமில்லாதபடியாகிவேகம்பின்னையு மதிகமானவாறே நிரதிசயதேஜோரூபமான திவ்யமங்கலவிக்ரஹமும் அத்ருஸ்யமாயென்றபடி. வாளிபொழிந்தவனென் றநுஷங்கிப்பது. ஸரங்களைவர்ஷித்தவன், திரு - ஸ்ரீயானவள், அமர் - அமர்ந்திருக்கிற, மார்வன் - வக்ஷஸ்ஸையுடையவனைக்கொண்டு, அந்த வீரஸ்ரீயோடே வந்தானென்றபடி. லக்ஷ்மியைத் திருமார்பிலே யுடையவனைக்கொண்டு என்றபடி. திருக்கடித்தானத்தை - ஸ்தலம், மருவி - ஆஸ்ரயித்து, உறைகின்ற - அங்கே நித்யவாஸம்பண்ணுகின்ற, மாயப்பிரான் - ஆஸ்சர்யசேஷ்டிதனான உபகாரகனைப், உள்ளுந்தோறும் - அநுஸந்திக்குந்தோறும், உள்ளுகை - அநுஸந்திக்கை, தித்திப்பான் - போக்யனாகின்றான். ॥௩॥

மூ—மாயப்பிரானென் வல்வினைமாய்ந்தற* நேசத்தினுலெனெஞ்சநாடுகுடிகொண்டான்* தேசத்தமரர் திருக்கடித் தானத்தை* வாசப்பொழின்மன்னுகோயில்கொண்டானே* ॥ ச ॥

கோயில்கொண்டான்றன் திருக்கடித்தானத்தைக்* கோயில்கொண்டானதனோடுமென்னெஞ்சகம்* கோயில்கொடெய்வமெல்லாந்தொழவைகுந்தம்* கோயில்கொண்டகுடக்கூத்தவம்மானே* ॥ ரு ॥

ஆ—பிராட்டியோடேகூடவந்து புகுந்தருளினுனென்கிறூர். ॥ க

(மாயப்பிரான்) இவன்திருக்கடித்தானத்தைக்காட்டிலு மென்னெஞ்சிலே வல்வினைகள்தீரும்படி ஸ்நேஹத்தைப்பண்ணிக்கொண்டு குடியாகவிருந்தருளினுனென்கிறூர். ॥ ச ॥

(கோயில்கொண்டான்) அங்குநிற்குமாயிருந்தநளுகையன்றியே ஸ்நேஹாதிசயத்தாலே திருக்கடித்தானத்தையுங்கொண்டு என்னெஞ்சினுள்ளே புகுந்தருளினுனென்கிறூர். ॥ ரு ॥

இ— அதிசயிதாநுஸந்தாநவிசேஷத்திலே யிப்பாட்டுக்குத் தாத்பர்யமென்று காட்டுகைக்காக அருளிச்செய்கிறூர் (அதுக்குமேலேயென்று) கீழ்ப்பாட்டில்சொன்ன அநுஸந்தாநத்துக்குமேலென்றபடி. உள்ளுந்தோறு மென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறூர் (என்னெஞ்சினுமென்று) திருவமர்மார்வன் என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறூர் (பிராட்டியிருத்தியால்) ॥ க ॥

✳ நாலாம்பாட்டு. ✳

திருக்கடித்தானத்தை வாசப்பொழிலித்யாதியாலே உத்யாநநாதருமாகச்சொல்லி நெஞ்சைக்குடியாகச்சொன்னதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறூர் (இவனித்யாதிகொண்டென்னுமளவாலே) இத்தால் கீழ்ச்சொன்ன அநுஸந்தாநத்திற்காட்டில் அதிசயமான அநுஸந்தாநஞ்சொல்லுகிறதென்று ஸமதிஸந்திர்விவக்ஷை. நெஞ்சிலே என்கிறதற்கு ஸ்நேஹத்தையித்யாதியோடே யந்வயம். ஸ்நேஹஸ்வபத்தாலே நேசத்தினுலென்கிறவக்ஷரமும் வ்யாக்யாதம். ॥

✳ ஐந்தாம்பாட்டு. ✳

இப்பாட்டுக்கெல்லாம் த்விதீயவாக்யார்த்தத்திலே தாத்பர்யமென்றுநினைத்து கநராருத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறூர் (அங்குமித்யாதியால்) ॥ ரு ॥

ப— தேசத்தமரர் - தேஜஸ்ஸையுடையவரானவமரருடைய, தேசம்- தேஜஸ், தேசமுடையவர்- தேசத்தார். தேசத்தமரரென்று ஸமஸ்தபதம், நித்யாநுபவத்தாலே தேஜிஷ்டராயிருக்கிற நித்யஸூரிகளுக்கு ஸ்ப்ருஹணீயமானவென்றபடி. திருக்கடித்தானத்தை - ஸ்பஷ்டம். வாசப்பொழில் - வாஸனையுடையவையான உத்யாநங்கள், வாஸ்வுபனிதஸம்ருத்திகளான உத்யாநங்களென்றபடி. மன்னு - மன்னியிருக்கிற, நித்யமாகவுண்டாயிருக்கிறவென்றபடி. கோயில்- வாஸஸ்தாநமாக, உத்யாநஸ்தாநமாகவென்று வ்யாக்யாநம். கொண்டான்- ஸ்வீகரித்தவனுன, மாயப்பிரான் - ஆச்சர்யபூதகுணசேஷ்டிதங்களையுடைய உபகாரகனுன, என்வல்வினை- என்னுடைய ப்ரபலபாபங்கள், வினைஸப்தமிங்கே துக்கவாசியாய்வாரம். காணவாராயென்றென்று கண்ணும்வாயுந்துவர்ந்து துவர்ந்துபட்டதுக்கமெல்லாமென்றபடி. மாய்ந்து - நசித்து, அற - நிஸ்ஸேஷமாம்படி, நேசத்தினுல் - ஸ்நேஹத்தினுலே. த்ருதீயத்தில் யகாரஸகாரயோ: அபேதத்தினுலே இப்பாட்டில்வாக்ய த்வந்த்வயத்திலும் த்விதீயவாக்யார்த்தப்ராதாந்யத்துக்குக் குறையில்லை. நெஞ்சநாடு - நாடுபோலேவிஸ்தீர்ணமான என்னுடையநெஞ்சை, ஸம்ஸ்லேஷவிஸ்லேஷங்களை அநுஸந்தித்துநுபவித்துப் பெரியநாடுபோலேவளர்ந்திருக்கிற நெஞ்சையென்றபடி. ஸம்ஸ்லேஷங்களிலும் விஸ்லேஷங்களிலும் அவனுடையகுணசேஷ்டிதாதிகளை வளர்த்துவேந்த்ர அநுஸந்திக்கையாலே த்யாகராஸம்ஸாரவாடிவத்தால் அநவரததீயாராதக ஸ்ராணகுணசேஷ்டிதாத்யநுஸந்தாநபரீதயா விஸ்தீர்ணமானநெஞ்சையென்கை. குடிகொண்டான் - ஸவாஸிகமாக நித்யவாஸம்பண்ணும்ஸ்தாநமாகஸ்வீகரித்தான். ॥ ச ॥

ப— கோயில்கொள்- கோயில்களைக்கொண்டவர்களாயிருக்கிற, எம்பெருமானைப்போலே தாங்களும் ஜகதாதாரமான்யூராகையாலே தனித்தனியேயொரு கோயில்களையுடையவர்களான வென்றபடி. தெய்வமெல்லாம் - தேவர்களெல்லாம், அநந்தவிஷ்வக்ஸேநாதிக ளெல்லாமென்றபடி. தொழ - ஸேவிக்கும்படி, வைகுந்தம் - ஸ்ரீவைகுண்டத்தை, கோயில்கொண்ட - தனக்குநிவாஸமாகவுடையவனுன, குடக்கூத்தவம்மான் - க்ருஷ்ணுயவதரித்து குடக்கூத்தாடினஸ்வாமியானவன், திருக்கடித்தானத்தை - ஸ்பஷ்டம், கோயில்கொண்டான்தன்- தன்கோயில்

மூ—தொழுவானவர்தாம்வந்து* நண்ணுதிருக்கடித்தானநகரே* ॥எ॥

தானநகர்கடலைச்சிறந்தெங்கெங்கும்* வானிந்நிலங்கடன்முற்றுமெம்மாயற்கே* யானவிடத்துமென்னெஞ்சுந்திருக்கடித்* தானநகருந்தனதாயப்பதியே* ॥அ॥

ஆ—(கொண்மின்) கோவிந்தனுடைய மண்விண்முழுதுமளந்த வொண்தாமரையை மண்ணவர்தாந்தொழுகிற படியைக்காண்கைக்காக வானவர்தாம்வந்து நண்ணுதிருக்கடித்தானநகரைநினையுங்கோள் இடர்கெடுமென்கிறார்॥

(தானநகர்கள்) இப்படி திருக்கடித்தானத்தையநுஸந்தித்துப் பின்னையுந்தன்றிறத்துச் செய்தருளின நன்மையைச்சொல்லுகிறார். உம்முடையநெஞ்சும் திருக்கடித்தானமு மெம்பெருமானுக்கிருப்பிடமாகச்சொன்னீர் வானின்னிலங்கடல் முற்றுமவனுக்கிருப்பிடமல்லவோவென்னில்? அங்ஙனேயாகிலு மென்னெஞ்சுந் திருக்கடித்தானமு மவனுக்குப்பிறந்துடைய திருநகரியாயிருக்குமென்கிறார். ॥அ॥

✳ ஏழாம்பாட்டு. ✳

இ— உள்ளத்துக்கொண்மினென்று சுருயித்துத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நினையுங்கோளென்று) இத்தால் கீழ்ப்பாட்டில் ஏத்துங்கோளென்றார், இப்பாட்டிலே நெஞ்சாலே நினைக்கவமையுமென்கிறாரென்று ஸங்கதி ஸூசிதை. ॥எ॥

✳ எட்டாம்பாட்டு. ✳

தாம்பெற்றஸம்ருத்திகளுக்கெல்லாம் நிதானம் திருக்கடித்தானமென்னும்வ்ருத்தியாலே அதைக்கொண்டாடாநின்றவிவர் அதோடொக்கத் தம்முடையநெஞ்சையு மவனுக்கிருப்பிடமாகச்சொல்லுகை யஸங்கதமன்றோவென்ன ஸங்கதிப்பிக்கிறார் (இப்படியிதந்ர்ஷியால்) ஹ்ருதயங்கமத்வபரிஷ்காரம் ஸ்ப்ருஹ்ய ப்ரகாரமநுஸந்திக்கிறாரென்றபடி. ஆனாலும் திருக்கடித்தானமு மென்னுடைச்சிந்தையும் என்கிறவிரண்டாம்பாட்டிற்சொன்ன வஸ்த்வர்த்தைச்சொல்லுகிறதாகையாலே இப்பாட்டு புநருக்தமன்றோவென்ன விதுக்குத் தாத்பர்யஞ்சொல்லுகைக்காக ஸங்கதிப்பிக்கிறார் (உம்முடையவிதந்ர்ஷியால்) தனதாயப்பதியென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பிறந்துடையவிதந்ர்ஷியால்) பிறந்துடையது - தாயப்ராப்தமானது, திருக்கடித்தானமும் தம்முடையநெஞ்சமும் மற்றஸ்தலங்களிற்காட்டில் அவனுக்கு விசேஷாதிஷ்டானவிஷயமென்கையிலே இப்பாட்டுக்குத் தாத்பர்யமாகையால் புநருக்தியில்லையென்றதாயிற்று. ॥அ॥

✳ ஒன்பதாம்பாட்டு. ✳

திருக்கடித்தானத்திலே யவன் விசேஷாதிஷ்டிதனாயிருக்குமென்று கீழ்ப்பாட்டிற்சொன்ன வர்த்தத்தை "திருக்கடித்தானத்துளாயர்க்கதிபதி யற்புத"னென் றிப்பாட்டிலுஞ்சொல்லுகையாலே இதுபுநருக்தியன்றோ

ஸ—உகந்தருளினதேசம் ப்ராயேண ஸம்ஸாரிகளுக்கேயாயிருக்குமென்று திருவுள்ளம். வானவர்தாம்வந்து- நித்யஸூரிகள்தாங்களேவந்து, ஸம்ஸாரிஜநங்களுக்கு ஸுலபனாயிருக்கிற ஸௌசீல்யகுணத்தாலே ஆக்ருஷ்டராய்க்கொண்டு அவசராய்த் தாங்களேவந்துஎன்றபடி. இங்குள்ளார் பரமபதத்துக்குப்போவது பரத்வத்தையநுபவிக்கைக்காக, அங்குள்ளாரிங்குவருவது ஸௌசீல்யகுணாநுபவம் பண்ணுகைக்காக என்றுகருத்து. நண்ணு- கிட்டாநின்றுள்ள, திருக்கடித்தானநகர்— அந்தநகரத்தை, இடர்கெட- உங்களுடைய து:க்கங்கள் எல்லாம்கெடும்படியாக, உள்ளத்துக்கொண்மின்- ஹ்ருதயத்திலேகொள்ளுங்கோள், மநஸ்ஸாலே ஸ்மரியுங்கோளென்றபடி. கொண்மினென்கிறவிடத்தில் ளகாரஸ்யணகாரேவரண காராதேசஃ. ॥எ॥

ஸ- வான்- பரமவ்யோமம், இந்நிலம்- இந்த பூமி, கடல்- க்ஷீரார்ணவம், எங்கெங்கும் முற்றும்- கண்ட கண்டவிடங்களெல்லாம், பரமவ்யோமபூமி க்ஷீரார்ணவங்களாகிற வெல்லாவிடங்களுமென்றபடி. தலைச்சிறந்து- தலையாகச்சிறந்து, தலையென்று உத்க்ருஷ்டம், சிறக்கை- அதிசயிதமாகை. மிகவும் ச்லாக்யங்களென்றபடி. எம்மாயற்கே— என்பக்கலிலே அதிநிவிஷ்டனான வாத்ஸல்யகனுக்கே, தானநகர்கள்— ஆவாஸஸ்தானங்களான நகர்கள், ஆனவிடத்தும்- ஆனவிடத்திலேயும், அவை வாஸஸ்தானங்களாயிருந்தாலும் என்றபடி. என்னெஞ்சும் திருக்கடித்தான நகரும்- ஸ்ரேஷ்டம். தனதாயப்பதி— தன்னுடைய தாயஸ்தானம், தனக்கஸாதாரணமாய் தாயப்ராப்தமான ஸ்தானமென்றபடி. இதையவன் தனக்கு தாயப்ராப்தஸ்தானமாக அபிமானித்திருக்குமென்கை. ॥அ॥

மூ—தாயப்பதிகடலைச்சிறந்தெங்கெங்கு* மாயத்தினால்மன்னிவீற்றிருந்தானுறை* தேசத்தமர்திருக்கடித் தானத்து* ளாயர்க்கதிபதியற்புதன்றானே* ௯

அற்புதனாராயணனரிவாமன* னிற்பதுமேவியிருப்பதென்னெஞ்சக* நற்புகழ்வேதியர்நான்மறைநின்றதிர்*

ஆ—(தாயப்பதிகள்) எல்லாமவனுக்குத் தாயப்பதிகளன்றோவென்னில்? அதப்படியேயாகிலும் திருக்கடித்தானமென்று லவன்திருவுள்ளம் விழுந்துகிடக்கும்படி ஆஶ்சர்யமென்கிறார். ௯

(அற்புதன்) இப்படி திருநாடு திருப்பாற்கடல்துடக்கமாகவுள்ள திருநகரிகளெல்லாவற்றிலும் மத்யஸ்தமாயிருந்த திருக்கடித்தானத்திலேநிற்பது மேவியிருப்பதென்னெஞ்சமென்கிறார். ௰

இ—வென்ன ஸவதரிப்பிக்கிறார் (எல்லாமித்யாதியால்) ஸம்வாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அப்படியேயாகிலுமென்று) உத்தரவாக்யத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (திருக்கடித்தானமித்யாதியால்) தம்மோடுஸம்ஶ்லேஷத்து லாஸக்தியாலே திருக்கடித்தானத்திலே யவன் விஶேஷாபிநிவேஶமுடையனாயிருக்குமென்று கருத்து. ௯

✳ பத்தாம்பாட்டு. ✳

திருக்கடித்தானத்தை யவன் விஶேஷித்து விரும்பாநிற்குமென்று கீழ்ப்பாட்டிற்சொன்னவிடத்தில் அத்தனைவிரும்புகைக்கு நிபந்தனம் தம்மோடுஸம்ஶ்லேஷத்தி லாஸக்தியென்னுமிடம் கண்ணாலன்றிக்கே ஊஹ்யமாத்ரமாயிருக்கையாலே அதை வெளியிடுகிறதாகையா லிப்பாட்டு கீழ்ப்பாட்டுக்குஶேஷமென்று ஸமதிகாட்டுகைக்காகக் கீழ்ப்பாட்டிலக்ஷ்யத்தை அநுவதிக்கிறார் (இப்படியித்யாதியால்) இப்பாட்டுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (திருக்கடித்தானத்திலேயித்யாதியால்) ௰

ஈ— தாய- தாயமான, தனக்கு நிரூபாதிகஸ்வம்மான வென்றபடி. பதிகள் எங்கெங்கும்- ஸ்தானங்களெல்லாவற்றிலும், இதுக்கு வீற்றிருந்தானென்கிறத்தோடன்வயம். தலைச்சிறந்து- தலையாயிருக்குமதொருபடி அதிஶயிதனாய், ஸர்வோத்க்ருஷ்டமாயிருக்குமதொருபடி அதிஶயிதனாயென்றபடி. ஸமுதிதஸௌஶீல்யாதிகுணஶாலியாயென்கை. மாயத்தினால்- ஆஶ்சர்யமான ஸந்நிவேஶத்தினாலே, ஸந்நிவேஶரூபஜ்ஞானத்தாலே என்னுதல். "மாயாவயுநம்ஜ்ஞாநம்" மென்றதிறே. மன்னி- ஸ்திரமாய், விடாமலென்றபடி. வீற்று- வீறுமைபெற்று, வீறு- உத்கர்ஷம், பரவ்யூஹாதிகளைப் போலன்றிக்கே ஸௌலப்யோத்கர்ஷத்தையுடையவனாயென்றபடி. இருந்தான்- எழுந்தருளியிருந்தவனானவென்றபடி. தேசத்தமர்- ஸமவதாநஸஹத்தாலே தேஜஸ்விகளான நித்யஸூரிகளுடைய, திருக்கடித்தானத்துள் - அவர்களுக்கு ப்ராப்யமான திருக்கடித்தானத்திலே, தானேயுறை - தானே நித்யவாஸம்பண்ணுகிற்கிற, தானேயென்ற அவதாரணத்துக்கு "நாஹம்வஸாமிவைகுண்டே நயோகிஹ்ருதயே ரவௌ । மத்பக்தா யத்ர காயந்தி தத்ர திஷ்டாமிநாரத" என்கிறபடியே மற்றஸ்தலங்களிலே யெழுந்தருளியிருக்குமிருப்பு அவனுக்கிருப்பாய்த்தோன்றுகிறதில்லை, என்னோடு ஸம்ஶ்லேஷிக்கைக்காகத் திருக்கடித்தானத்திலே யெழுந்தருளியிருக்குமதுவே அவனுக்கிருப்பாகத் தோன்றுகிறதென்றுகருத்து. ஆயர்க்கதிபதி - ஶௌரிவம்ஶ்யனானவன், அற்புதன் - ஆஶ்சர்யபூதன், திவ்யஸ்தலங்களெல்லாம் தனக்குத்தாயப்பதிகளாய் தானுமவற்றிலே வீறுபெற்றருளியிராநிற்கச்செய்தேயு மென்னோடுஸம்ஶ்லேஷிக்கைக்கு உறுப்பானநிலமென்று திருக்கடித்தானத்தை விஶேஷித்து விரும்பாநிற்கிறவவ னாஶ்சர்யபூதனன்றோவென்றபடி. ௯

அற்புதன் - ஆஶ்சர்யபூதனான, ஆஶ்சர்யமானசேஷ்டிதங்களையுடையவனானவென்றபடி. நாராயணன் - ஸகலபரரக்ஷைவிடாதபடி வாத்ஸல்யாதிகுணஶாலியான, அரி - ஹரியான, ஸமாஶ்ரிதவிரோதிநிவர்த்தகனானவென்றபடி. வாமனன் - தானர்த்தியாய்ப்பிறந்தாகிலு மாஶ்ரிதருடைய ஸர்வாபேக்ஷிதங்களையும் நிர்வஹித்துக்கொடுக்குமவனான வெம்பெருமான், நிற்பது - வஸிப்பது, இதுக்குத் திருக்கடித்தானமென்கிறத்தோடேயன்வயம். நற்புகழ் - நல்லபுகழையுடையவர்களான, நல்புகழென்கிறவிடத்திலே லகாரஸ்ய றகாராதேஶோஹாந்தஸ: புகழ் - கீர்த்தி, அநந்யப்ரயோஜநர்களென்கிற கீர்த்தியையுடையவர்களானவென்றபடி. வேதியர் - வைதிகர்களுடைய, நான்மறை - நாலுவேதங்கள், அவர்களாலே உத்கோஷிக்கப்படுகிற நாலுவேதங்களென்றபடி. நின்று - ஸ்திரமாக, நிரந்தரமாகவென்றபடி, அதிர் - அதிராநிற்கிற, முழங்குகிற

ஸ்ரீ—தா—பிரான் - ஸ்ரீதருடைய ஹ்ருதயத்திலே நித்யவாஸம்பண்ணுமவனாகையாலும், (ஸ்ரீவத்ஸவக்ஷா:) திருவமர்மார்வன் - பெரியபிராட்டியார் பொருந்திவர்த்திக்கிற திருமார்வையுடையவனாகையாலும், (ஸ்ரீவாஸ:) ... மாயப்பிரானென் - ஸுலபனாக உபகரிக்குமவனாகையாலும், (ஸர்வஸஞ்ஜநாக:) கோயில்கொள்தெய்வமெல்லாந்தொழ - நித்யஸூரிகளாலே நிரந்தரம் ஸேவிக்கப்படுகையாலும், (தேவவிஷ்வக்ஸேந:) மதுசூதவம்மானுறை - விரோதிநிரஸநஸ்வபாவனாகையாலும், (தோஷநாஶன:) உள்ளத்துக்கோவிந்தன் - ஸர்வஸாக்ஷியாகையாலும், (ஸர்வஸாக்ஷிதவிஷயகோசரத்வஸுத்தத்வ:) வானின்னிலங்கடலித்யாதி - ஸர்வேஶ்வரேஶ்வரனாகையாலும் ஸ்ரீதருடைய ஸமஸ்தகத்யாநிர்வாஹகனாகவுடையனாகையாலும், (ஸர்வாகாரஸாதகஸ்ய:) ஆயர்க்கதிபதியற்புதன்றனே - ஸர்வப்ரகாரத்தாலும் ஸுலபனாகையாலும், ஸர்வப்ரகாரத்தாலுமென்கிறவித்தை விவரணம்பண்ணுகிறது. "அற்புதநாராயணனரிவாமனன்" என்றுமேலிற்பாட்டு, தன்னையேஸ்ருஷ்டமான நாமத்தைத்தான் வாஸஸ்தானமாகவுடையனாவது, விராஜங்களான விரண்டுவடிவைக்கொண்டு விரோதியைநிரஸிப்பது, சிறுகாலைக்காட்டிப் பெரியகாலாலேயளப்பது, இப்படிகளால் திருக்கடித்தானத் தெம்பெருமானும் ஸ்ரீதருக்கு ஸ்வவிதமாக ஸந்நிதியிருக்கிறானென்று "எல்லியுங்காலை" என்கிற ஶ்லோகத்திலே ஆழ்வார் அருளிச்செய்தருளினாரென்கிறார். ||௬௮௭||

ஸ்ரீமதேநிகமாந்தமஹாதேஶிகாய நம:.

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

எட்டாம்பத்தில் ஆறாந்திருவாய்மொழிமுற்றிற்று.

❧❧❧ ✳ ❧❧❧

# ஏழாந்திருவாய்மொழி.

ஆ— (இருந்தும்வியந்து) இப்படியென்னெஞ்சிலே புகுந்தருளுகிறான், நான்தன்னைப்பிரிந்து பட்டபாடெல்

❧❧❧ ஏழாந்திருவாய்மொழி. ❧❧❧

இ— மாயக்கூத்தனில் தமக்கோடின விடாயெல்லாம்மாற்றுகைக்காக எழுந்தருளின வெம்பெருமான்தம்பக்கல்செய்கிற அநுபவிஶேஷவாத்ஸல்யாதிகளை ஸ்வீக்ருதிஶபத்தாலே ஸூசிவித்துக்கொண்டநுபவிக்கத்துடங்கின ஆழ்வார் அவற்றில் திருக்கடித்தானத்துநின்று செய்தருளின சிலாநுபவிஶேஷங்களை கீழ்த்திருவாய்மொழியிலே பேசி யநுபவித்து தநந்தரமவன் செய்தருளாநின்றதாய் தமக்கு ஸாக்ஷாத்த்ருஷ்டமான ஸம்ஶ்லேஷவிஶேஷாதிவாநுபவத்தை யித்திருவாய்மொழியிலே யநுபவிக்கிறாரென்று ஸம்கதிஸமேதமென்று ஸூசிப்பிக்கைக்காக வருளிச்செய்கிறார் (இப்படியென்று) இப்படியென்றது - கீழ்த்திருவாய்மொழியிலுக்தஸ்வீக்ருதிஎன்றபடி. அதாவது:— தான் ஸபரிகரனாகவெழுந்தருளினால் தக்ஷணஸமாஜ்ஞம்ஹிதநிஜபரிவாதஸ்வீக்ருதிவெள்ளமெனக்கு ஸாத்யமாமென்றுபார்த்து ஸபரிகரமெழுந்தருளாதே திருக்கடித்தானத்தில்நின்று தானெழுந்தருளினஸ்வீக்ருதியை எனக்கு ஸாத்மிப்பித்தருளியென்றபடி. "என்னைத்தன்பொன்னடிக்கீழிருத்தும்" என்கிறவித்தாலும், கருத்தையுறவீற்றிருந்தா" னென்கிறவித்தாலும் நான் பாஹ்யஸம்ஶ்லேஷத்தையபேக்ஷித்தால் தானென்நெஞ்சிலே புகுந்திராநின்றானென் றிப்பாட்டுக்குப் பொருளாகத்தோற்றுகிறதாகையாலே 'ஸ்ரீராமவ்ருக்ஷ:கோவிதாரநாமவேஷ' என்கிற உபாலம்பவாக்யம்போலே இப்பாட்டும் உபாலம்பவாக்யமாய்த்தோற்றுகிறவிது "பொருத்தமுடைவாமன" னென்று அவனுக்கு த்ரணயித்வஞ்சொல்லுகிற வித்தோடுவிரோதமன்றோவென்ன? "என்னைத்தன் பொன்னடிக்கீ"ழித்யாதிவாக்யத்துக்குத் தமக்குள்ளபாஹ்யஸம்ஶ்லேஷாபேக்ஷையைச் சொல்லுகையிலே தாத்பர்யமன்றிக்கே கீழ் தாம்பட்டவ்யஸநாதிஶயத்தை ஸோபாலம்பமாக அநுவதித்தம்ஶவத்தாலே எனக்கவன்பக்கலுள்ள ஆஸக்தியைக்காட்டிலு மவனுக்கென்பக்கலாஸக்தி ஸஹஸ்ரகுணாதிகமாயிராநின்றதென்கையிலே தாத்பர்யமாகையால் விரோதமில்லையென்றுகாட்டுகிறார் (என்னெஞ்சிலேஇத்யாதி பட்டதென்னுமளவாலே) இவ்வநுவாதத்திற்கு ஸோபாலம்பத்வம் பாட்டின்ஸ்வாரஸ்யத்திலே ஸ்பஷ்டமாகிறது. புகுந்தருளுகிறானென்றது— க்ரியாவாசகமன்று, புகுக்

மூ.— இருத்தும்வியந்தென்னைத்தன்பொன்னடிக்கீழென்* றருத்தித்தெனைத்தோர் பலநாளழைத்தேற்குப்*
பொருத்தமுடைவாமனன்றான்புகுந்தென்றன்* கருத்தையுறவீற்றிருந்தான்கண்டுகொண்டே* ||க||

ஆ.— ஸாமான்யமொன்றன்றென்னும்படி தானென்னைப்பிரிந்து வ்யஸநப்பட்டு ஒருவண்ணமென்னைக்கண்டுகொண்டு புகுந்து ஸர்வோத்தரனாயிருந்தருளினான், ஒருவனுடைய ப்ரணயித்வமிருக்கும்படியென்? இவனையாகாதே நான் இதுவோபொருத்தமென்றுசொல்லிற்றென்கிறார். ||க||

(இருந்தான்) என்னுள்ளேபுகுந்தருளுகிறான், என்னுடைய ஸகலகரணங்களும் இக்கரணமல்லது மற்றொரு ந

இ—தருளுகிறவனென்றபடி. *

முதற்பாட்டு.

ஒன்றன்றென்னும்படியென்றது- இதொருவ்யஸநமன்றென்று சொல்லலாம்படியென்கை. ஸர்வேச்வரன் ஆழ்வாரைப்பிரிகையாவது - தன்னையிவ ரநுபவியாதஸமயத்தில் தனக்கிவரோடு ஸாம்ராஜ்யமன்றிக்கேயொழிகை, லோகத்திலும் ராஜனுக்குவிரஹமாவது ராஜ்யத்தினுடைய ஆதிபத்யராஹித்யத்தால் பிறந்த ஸாம்ராஜ்யஹாநியிறே! வீற்றிருந்தானென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸர்வோத்தரனாய் இத்யாதியால்) பொருத்தமுடையென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஒருவனுடைய இத்யாதியால்) இவ்வாச்ரயத்தாலே மாயக்கூத்தனில் தாமபேக்ஷித்த பாஹ்யஸம்ச்லேஷமிப்போது லபிக்கவில்லையேயாகிலும் அநாதிஸம்ஸாரியாய்ப்போந்த தம்முடைய அத்யந்தநிகர்ஷத்தையும் ஸர்வேச்வரன்தன்னுடைய உத்கர்ஷத்தையும்பாராதே தம்பக்கலபிநிவிஷ்டனாயிருக்கும்படிகளைக்கண்டு தஜ்ஜநிதநிரவதிகஹர்ஷத்தாலே இம்மாநஸஸம்ச்லேஷமாத்ரத்தினுடைய மவனையிப்படி கொண்டாடுகிறாரென்றுகருத்து. இத்தால் "ப்ரீதிரதவ" மென்கிற ஸங்கமாண மித்திருவாய்மொழிக்கு ப்ரதிபாத்யமென்றதாயிற்று. ||க||

இரண்டாம்பாட்டு.

பதவாக்யார்த்தத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னுள்ளேயித்யாதியால்) இக்கரணமென்றது- இந்தப்ரணயித்வகரணமென்றபடி. மற்றொருகரணமென்றது - இங்கு ஸௌலப்யஸௌசீல்யவாத்ஸல்யாதி ப்ராப்யதமகரணவாம். தேஸா இக்கரணத்தை யநுபவிக்கும்போது தஜ்ஜநிதநிரவதிகவ்யாப்தியாலே பாஹ்யகரணங்களும் ஸ்விஷயாபேக்ஷயில்லாமல் அத்யந்ததத்பரங்களாம்படியென்கை. பெருந்தாளித்யாதி

பா.— என்னை- தன் விரஹத்தில் ப்ராணதாரணமஸமாதனான வென்னை, இதுக்கு இருத்து மென்கிறதோடே அந்வயம். வியந்து- விஸ்மயப்பட்டு, இந்த ஸம்ஸாரஸமயத்திலே நம்மை அபேக்ஷிப்பானொருவ னுண்டாவதேயென்று விஸ்மயப்பட்டு என்றபடி. தன்பொன்னடிக்கீழ்- தன்னுடைய ஸ்ப்ருஹணீயமான திருவடிகளின்கீழே, இருத்தும் என்று- ப்ரதிஷ்டிதனுக்கி யருளுவனென்றத்யவஸித்து, அருத்தித்து- அர்த்தித்து, இதுக்கு அழைத்தேற்கு என்கிறதோடே அந்வயம். எனைத்து- அநேகமாக, ஓர்- ஒருபடிப்பட்டவையான, ஸஹஸ்ரகாலசதகோடிகளான வென்றபடி. பஹுஸம்வத்ஸரம் அபிச்லேஷ ஸம்வத்ஸரங்களான என்கை. பலநாள்- அஸம்க்யாததிநங்கள்தோறும், மாயக்கூத்தனில் நாளும்நாளுமென்றதை அநுவதிக்கிறபடி. அழைத்தேற்கு- ஆக்ரந்தநம் பண்ணினவனாயிருக்கிற வெனக்காக, ஆளக்கூப்பிட்டழைத்தக் காலென்கிறதை யநுவதிக்கிறபடி. இது ஸோபாலம்பமம். நாமிவனுடைய ப்ரணயித்வத்தையறியாதே இவன் விச்லேஷித்தானாகவும் நாமபிநிவிஷ்டராகவும்நினைத்து ஆக்ரந்தநம்பண்ணி என்னகார்யஞ்செய்தோ மென்று மதம். இப்படி ஆக்ரந்தநம் பண்ணினவனாயிருக்கிறவென்னோடு ஸம்ச்லேஷிக்கைக்காக வென்றபடி. பொருத்தமுடை- ப்ரணயித்வத்தை யுடையவனான, வாமனன்- ஸ்ரீவாமநனானவன், தன்னுடைமையைப்பெறுகைக்குத்தான் அர்த்தியாயிருக்குமவனை நானர்த்தித்து என்செய்தேனானேனென்று கருத்து. தான்கண்டுகொண்டு- என்னைக் காணப்பெறாதே வ்யஸநப்பட்டதான் ஜந்மதரித்ரனானவன் நிதியைக்கண்டாப்போலே யென்னைக்காணப்பெற்று, என்தன்கருத்தை- என்னுடைய ஆசயத்தை, தன்சப்தம் ஸ்வார்த்தகம். என்னுடைய மநஸ்ஸையென்றபடி, புகுந்து- ப்ரவேசித்து, உற- உறுதியாக, ஸுஸ்திரமாகவென்றபடி. வீற்றிருந்தான்- வீறுபெற்றிருந்தான், வீறு- உத்கர்ஷம், மத்ஸம்ச்லேஷ மஹாநந்தாஹத்தாலே ஸர்வோத்தரனாயெழுந்தருளியிருந்தானென்றபடி. ||க||

மூ — இருந்தான் கண்டுகொண்டெனதேழைநெஞ்சாளுந்* திருந்தாதவோரைவரைத்தேய்ந்தறமன்னிப்* பெருந்தாட்களிற்றுக்கருள்செய்தபெருமான்* தருந்தானருள்தானினியானறியேனே* ‖உ‖

ஆ — ப்ராணமறியாததொருபடி யிருந்தருளினான், ஆதலாலதின்மேலில்லை யென்னும்படி பண்டெனக்குச்செய்தருளினவருளை யோரருளாகமதியேனென்கிறார். ‖உ‖

(அருள்தான்) என்னுள்ளேயிருந்தருளின யிவ்வருளல்லது மற்றோரருளை நானோரருளாகமதியேன் அவனு

இ — அருள்தானித்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆதலாலித்யாதியால்) “ஸ்வேஷு வேஷ்மஸு ... ஷா” இத்யாதிகளிற்படியே ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்கு அரைகுலையத் தலைகுலைய வந்துதவியதாகையாலே யிதின்மேலில்லையென்கிறவர்த்தம் த்ருதீயபாதத்திலே ஸ்பஷ்டமாகவிவக்ஷிக்குமென்றுகருத்து. எம்பெருமான் ஆஸ்ரிதருக்குச்செய்ததெல்லா மிவர்தமக்குச்செய்ததாக நினைத்திருப்பாரொருவராகையாலே ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்குச் செய்தருளின தெனக்கென்கிறாரென்றுகருத்து. யானறியேனென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஓரருளாகவித்யாதியால்) ‖உ‖

## * மூன்றாம்பாட்டு. *

நானிப்படி யவனென்பக்கல்பண்ணுகிற வாஸக்தியைக்காட்டில் வேறொருக்ருபையை மதியேனென்று இருந்தாப்போலே அவனுமென்பக்கல் பண்ணுகிறப்போலே மற்றொன்றிலு மாஸக்திபண்ணுகிறானில்லையென்று வ்யஞ்ஜிப்பிக்கைக்காக “அருள்தானினியானறியே” னென்று கீழ்ச்சொன்னத்தை யநுபாஷிக்கிறாரென்று நினைத்

ப — எனது - ஸ்வீயமான, ஏழை - சபலமான, கண்ட விஷயங்களெல்லாத்திலும் சபலமான வென்றபடி. நெஞ்சு - மனஸ்ஸை. ஆளும் - ஆளாநிற்குமவரான, ‘விஷயவாஸிதேனைவ ஸங்கல்பேந வித்ருஷ்ணோ விதிருஷ்ட ஸாதநவத்ஸீ ஸோநாதிதேவ ப்ரயோஜநம் ப்ரதிமே’’ என்கிறபடியே ஸங்கல்பங்களிலே வைராக்யஜநகராகிற்குமவரான வென்றபடி. திருந்தாத - ஸ்வபாவத்திலேஸ்திக்ஷிக்கஸக்யமல்லாதவரான, எத்தனையேனும் ஸமர்த்தரான்கள் நிக்ரஹிக்கப்புக்காலும் நிக்ரஹிக்க ஸக்யமல்லாதவரான வென்றபடி. ஓர் - லோகவிலக்ஷணரான, ஸ்வபாவத்திலே நிஸ்ஸாமாந்யகரான வென்றபடி. ஐவரை - பஞ்சேந்த்ரியங்களாகிற ஸோதரர்களை, ப்ரயோஜநாந்தரங்களாகிற, இவை ப்ரயோஜநங்களாய்க்கொண்டு படுத்தினபாடுகளை நினைத்து இவற்றை சேதநஸமாதியாலே ஐவரென்று நிர்தேசிக்கிறார். தேய்ந்து - க்ஷயித்து, அற - நசிக்கும்படி, ஸ்ராக்ய ப்ராணங்களில் ஆஸக்திமாண்டு நிவ்ருத்தவ்யாபாரங்களாயடங்கும்படி யென்கை. ஸமஸ்த வஸ்துக்களையும் ப்ராணாநாஸமாக நிவ்ருத்தங்களாய் விஷயாந்தர விமுகங்களாகும்படியென்று தாத்பர்யம். மன்னி - ஸ்திரனாய், என்னெஞ்சிலே ஸந்நிஹிதனாயென்றபடி. கண்டுகொண்டு - பார்த்துக்கொண்டு, ஆஸ்ரிதனாயநாஸமுண்டானால் அதைப்பார்த்துக்கொண்டேயிருக்குமாப்போலே ‘‘ஸோ வநாஸ்ரமவிவஜ்ஞ’’ என்கிறபடியே என்னைப்பார்த்துக்கொண்டேன்றபடி. இருந்தான் - ஸ்வஸ்தம், பெருந்தாள் - பெருந்தாளையுடைத்தான, தாள் - கால், உத்தமோபஸோபஸ்த வாஹ்யமானனென்றபடி. ஸஹஸ்ரவருஷம் க்ராஹக்ருதம் ஸஹஜநிதவேதனை பொறுக்கமாட்டாமைக்கு ஹேதுவென்றுகருத்து. களிற்றுக்கு - கஜத்துக்கு, களிறு - கஜம், கஜேந்த்ராழ்வானுக்கென்றபடி. அருள் செய்த - க்ருபைபண்ணினவனான, பெருமான் - ஸர்வேஸ்வரன், தான்தருமென்று மாறிய யிப்பது. தான் - ஸ்வயமேவ, அந்யப்ரேரணாதிகளன்றிக்கேஎன்றபடி. தருமருள் - தான்தந்தருளினக்ருபையையும், ஸ்ரீகஜேந்த்ராழ்வான்பக்கல் செய்தருளின க்ருபையையுமென்றபடி. ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்கு க்ருபைகொடுத்தது தமக்குத்தந்ததாகத் தோற்றுகையாலே தருமருளென்கிறார். தருமருளென்றது தந்தவருளென்றபடி. தருமென்கிறவர்த்தமானநிர்தேசம் ஸ்ரீகஜேந்த்ராழ்வான்பக்க லுபகாரகமான க்ருபைக்கு யாவச்சாஸ்வத அநுவ்ருத்திவிஷயதாஜ்ஞாபநார்த்தம். அருள்தானென்கிற தான்ஸப்தம் அவ்யயார்த்தகம். இந்தக்ருபை லோகத்திலேதான்பண்ணின க்ருபையெல்லாத்திலு மதிகமாயிருந்தாலுமென்றபடி. இனி - இந்த்ரியவ்யாபாரஸமுந்திரும் படி என்பக்கல் க்ருபைபண்ணினபின்பு, யானறியேன் - நானொருக்ருபையாக எண்ணுகிறிலேனென்றபடி. சிலர்களொருஸமஸ்திலே ஒருமுதலையாலேக்லேசப்பட்ட கஜேந்த்ராழ்வான்பக்கல் அருளினது அநேககாலமாவ்யாபாரஸம்ஸாரஸமுத்ரத்திலே ஐந்துமுதலைகளாலே நலிவுண்டவென்பக்கலருளினதோடொக்குமோ வென்றுகருத்து. ‖௩‖

ஆ — மாயமயக்குமயக்கானென்னைவஞ்சித்து* ஆயன்அமரர்க்கரியேறெனதம்மான்* தூயசுடர்ச்சோதிதனதென்னுள்வைத்தான்* தேசந்திகழுந்தன்திருவருள்செய்தே* ||௪||

திகழுந்தன்திருவருள்செய்துலகத்தார்* புகழும்புகழ்தானதுகாட்டித்தந்தென்னுள்* திகழுமணிக்குன்ற

---

ஆ — பார்த்தென்றிறத்துப்பொய்செய்தருளான், ஆதலால் ஸர்வத்ருசீகமான வவன்திருவடிவை யென்னுள்ளே ஸர்வலோகமுமறியும்படி மெய்யேவைத்தருளினனென்கிறார். ||௪||

(திகழும்) லோகமெல்லாமறியும்படி என்னுள்ளேயிருந்தருளின வத்தனையேயோ, இப்புகழையே லோகமெல்லாம்புகழும்படியாகவு மிருந்தருளினன், இருந்தருளுகிறான் தன்னுடைய உத்கர்ஷத்தையு மென்னுடையநிகர்ஷத்தையும் பார்த்து "நானத்தைவிட்டகலுகிறேன்" என்னும்பயத்தாலே நான்தன்னைவிடமாட்

---

இ — மருளிச்செய்கிறார் (ஸம்யகித்யாதியால்) தாரீயவாக்யத்துக்குத்தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸர்வலோகமுமறியும்படியென்று) மயக்கானென்கிறவித்தால் ஸித்தவஸ்துத்தையருளிச்செய்கிறார் (மெய்யேயென்று) ||௪||

*ஐந்தாம்பாட்டு.*

திகழுந்தன்திருவருள்செய்தென்றது கீழ்ப்பாட்டிற்சொன்ன மாணத்திற்காட்டில் அதிகமானமாணஞ்சொல்லுகைக்காக வத்தைபநுவதித்தபடியென்று நினைத்ததுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (லோகமித்யாதியால்) இதுவேயிப்பாட்டுக்கு ஸங்கதியும் உலகத்தாரித்யாதி தந்து உத்தரத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இப்புகழையேயித்யாதியால்) பாட்டிலே நின்றானிது ஏகவாக்யமாயிருந்தாலும் லோகமெல்லாம்புகழும்படியிருந்தருளுகையும் தன்னழகைக்காட்டி வசீகரிக்கையுமாகிற வர்த்தத்தை மிவ்வாக்யத்துக்குத் தாத்பர்யமென்று காட்டுகைக்காக வ்யாவ்ருத்தத்திலே இருந்தருளினனென்றிங்கே வாக்யபேதம் பண்ணியருளினார். த்ருதீயவாக்யத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இருந்தருளுகிறானித்யாதி கொண்

---

ஈ — அமரர்க்கு- நித்யஸூரிகளுக்கு, அரியேறு- ஸிம்ஹச்ரேஷ்டனை, அரி- ஹரி, ஸிம்ஹமென்றபடி. ஏறு- வ்ருஷபம், ராஜாதிராஜனை யென்றபடி. ஆயன்- இப்படி ஸர்வேச்வரனாயிருந்துவைத்து அறிவில்லாத விடையர்க்கு ஸஜாதீயனாயவதரித்தவனை, எனதம்மான்- கத்ருசநிக்ருஷ்டனை யெனக்குந்த ஸௌசீல்யத்தை ப்ரகாசிப்பித்தென்னை வசீகரித்தடிமைகொண்ட ஸ்வாமியானவன், என்னைவஞ்சித்து- தன்திருவடிகளிலே ந்யஸ்தனானவென்னை வஞ்சித்து, மாயமயக்கு- ஆச்சர்யங்களான சேஷ்டிதங்களாலே, மயக்கான்- ப்ரமிப்பியான், அவன் ஸௌசீல்யதிப்பாகையாலும் நான் தன்னைநம்பினவனாகையாலேயுமென்னைவஞ்சித்துப்ரமிப்பியானென்றபடி. ஆச்ரிதவிரோதிகளான துர்யோதநாதிகளையிறே வஞ்சித்துப்ரமிப்பிப்பது என்று கருத்து. தேசந்திகழும்- தேசமெல்லாம் ப்ரகாசிக்கும்படியான, ஸர்வலோக ப்ரஸித்தமாம்படியான வென்றபடி. தம்திருவருள்செய்து- மற்றொருவர்க்கன்றிக்கேதனக்கே அஸாதாரணமான க்ருபையை யென்பக்கலிலே செய்தருளி, தனது- தனக்கஸாதாரணமான, தூய- பாவநமான, ஸர்வத்ருசீகமானவென்றபடி. சுடர்ச்சோதி- சுடரையுடைத்தான ஜ்யோதிஸ்ஸை, ப்ராக்ருததேஜஸ்ஸை. சுடர்- ப்ரபை, ப்ரபாஸமூஹமாய் அப்ராக்ருதஜ்யோதிர்மயமான திவ்யவிக்ரஹத்தை, என்னுள்ளே வைத்தான்- என்னுடைய ஹ்ருதயத்திலே ப்ரகாசிப்பித்தருளினன். ||௪||

ப- திகழும்- ஸர்வலோகங்களிலும் ப்ரகாசிக்கும்படியான, தன்திருவருள்செய்து- தனக்கே அஸாதாரணமான க்ருபையை யென்விஷயத்திலே செய்தருளி, உலகத்தார் புகழும்- என் பக்கல் தான்செய்தருளின ஸந்நிவேசத்தைக்கண்டு லோகத்தார் ஸ்தோத்ரம்பண்ணுகிற, அது- அந்தப்ரஸித்தமான, புகழ்- ஸ்தோத்ரத்தை, தான்- என்பக்கலஸந்நிவிஷ்டனானதான், காட்டித்தந்து- எனக்கு ப்ரகாசிப்பித்தருளி, ஸர்வேச்வரனுக்கொருவேதநன்பக்கலித்தனை ஸந்நிவேசமுண்டாவதேயிதென்ன வாச்சர்யமென்று லோகத்தாரெல்லாம் நானறியக்கொண்டாடும்படி செய்தருளியென்று வடுதாத்பர்யம், என்னுள்- என்னுடைய ஹ்ருதயத்திலே, இதுக்கு நின்றானென்கிறத்தோடே யந்வயம். திகழும்- விளங்காநின்றுள்ள, மணிக்குன்ற மொன்றேயொத்து- ஒரு மணிபர்வதத்துக்கு ஸத்ருசனாய், ஒன்றேயென்கிறவிடத்தில் ஏகாரம் வாக்யாலங்காரம், ஹ்ருதயமான ஹ்ருதயஸ்தானமாகிற ஸம்பந்தத்தைப்பெற்று அபூர்வலாபம்பெற்றாப்போலே அத்யந்தஸந்தோஷ விக்ரஹஸாலியாய்க்கொண்டு ப்ரேமாதிசயத்தாலே அத்தைவிட்டு வஸிக்கமாட்டாமல் நிற்கையாலே ஐச்வர்யநிர்வாஹ

மூ— மொன்றேயொத்துநின்றான்* புகழும்புகழ்மற்றெனக்குமோர்பொருளே* ||௫||
பொருண்மற்றெனக்குமோர்பொருடன்னிற்சீர்க்கத்* தருமேற்பின்னையார்க்கவன்றன்னைக்கொடுக்கும்*
கருமாணிக்கக்குன்றத்துத்தாமரைபோற்* றிருமார்புகால்கண்கைசெவ்வாயுந்தியானே* ||௬||

ஆ— டாதபடியாகத் தன்னைக்காட்டி யென்னைவஶீகரித்துக்கொண்டருளின புகழல்லது மற்றவனுடையபுகழையொருபுகழாகமதியேனென்கிறார். ||௫||

(பொருண்மற்றெனக்கும்) தானுகிறவஸ்துவைத்தையொழிய வேறேசிறியதொருவஸ்துவைத்தை யெனக்குத்தந்தால் நிரவதிகஸௌந்தர்யத்தையுடையனான தன்னை வேறுகொள்வாரில்லையென்று இப்படிதன்னையெனக்கு

இ— டருளினவென்னுமளவாலே) இருந்தருளுகிறானென்றது - இருந்தருளுகிறவென்றபடி. இதுக்குக்காட்டி வஶீகரித்துக்கொண்டருளின இரண்டிடத்திலுமந்வயம். ||௫||

✳ ஆறும்பாட்டு. ✳

மற்றென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தானுகிறவித்யாதியால்) சீர்க்கவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (சிறியதென்று) ஓர்பொருள்என்கிறதற்குத் தருமேலென்றநுவதித்துத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஒருவஸ்துவைத்தையித்யாதியால்) உத்தரார்த்தத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நிரவதிகேத்யாதியால்) பின்னையார்க்கித்யாதிவாக்யம் க்ஷேபமென்றுநினைத்ததுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தன்னையித்யாதியால்) இவ்வாக்யம் க்ஷேபமன்றிக்கே யதாஶ்ருதமாகில்இப்பாட்டி லெம்பெருமானுக்கொருமாணம் சொல்லிற்றாகாமையாலிது ப்ரகரணத்துக்குச்சேராதொழியும். தம்மையொழிய ஸமவகமாண

ப— ஸந்நிஹனைப் என்றபடி. நின்றான்- ஸ்ரீரனுபிராநின்றான், மற்று- இதல்லது, இப்படி யென்னெஞ்சிலே யிருந்தருளின விம்ஹாரமாணமல்லது என்றபடி. எனக்குமென்கிற (வகாரத்தை) உம்மை) புகழும்புக ழென்கிறதோடே கூபிப்பது. புகழும்புகழும்- ஸ்தாதிக்கப்படுகிற மாணமும், லோகத்தாராலே ஸ்தாதிக்கப்படுகிற வேறொருமாணமுமென்றபடி. புகழுமென்கிறவிடத்தில் வகாரம் புகழுக்கு ஈக்ஷாஸத்ருஸ்யத்யோதநார்த்தம், எனக்கு- இம்மாணத்தை யறிந்தவெனக்கு, ஓர்பொருளே- ஒரு வஸ்துவோ. ||௫||

ப(பொருள் தன்னில்- வஸ்துக்களுக்குள்ளே, பொருள்- வஸ்துவும், தன் ஸ்வரூபம் ஸ்வபாவம், மற்று- வ்யதிரிக்தமான, தானுகிற வஸ்துவைத்திற்காட்டில் வேறானவென்றபடி. ஓர் பொருள்- ஒரு வஸ்துவைத்தை, வைஶ்வரூபாதிகளிலே யொருவஸ்துவைத்தை யென்றபடி, எனக்கும்- அநந்யப்ரயோஜநனான வெனக்கும், இதற்குத்தருமென்கிறதோடே யந்வயம். சீர்க்க- சீர்மையாக, வாத்ஸல்யமாக வென்றபடி. தருமேல்- தந்துவிட்டானாகில், பின்னை- ஸ்வவஸ்துவைத்தயா நான் நிராகாங்க்ஷனானபின்பு, கருமாணிக்கக் குன்றத்துத்தாமரைபோல்- நீலரத்நமயபர்வதத்தில் காரணதாரூல வஸ்துக்கள்போலே, திருமார்பு- லக்ஷ்மீஸஹ காந்திரஞ்சிதமான வக்ஷஸ்ஸையும், கால்- அத்திருமார்பிலழகை யநுபவித்து ஸ்ரீவைஷ்ணவரானவர்கள்விழும் திருவடிகளையும், கண்- அவர்களை அநவதிக ஸௌஹார்த்த மதுரஸ்நிக்தமாக கடாக்ஷிக்கும் திருக்கண்களையும், கை- அவர்களை முதுகைத்தட்டி ஆநந்திப்பிக்கும் திருக்கைகளையும், செவ்வாய்- காரணாதரத்தையும், "ஸ்மிதபூர்வாபிபாஷீ ஸ்வஸ்வஸம்ஶாநயநஜநம்" என்கிறபடியே அவர்களைநோக்கி ஸம்பாஷணம்பண்ணும் திருவதரத்தையுமென்றபடி. உந்தியான்- அவர்களுக் கநுஸந்தேயமாய் ஸகலஜகத்ஸ்ருஷ்டிஹேது ஸ்ரீமத்தமான திருநாபியையுமுடையவனான, உந்தி- நாபி, திருமார்வுதுடங்கி உந்தி ஈறாகவும் அந்வயம். உந்தியுடையவன்- உந்தியான் என்று அதின்மேல் ஸர்வதேவஸ்த்வம், நானநுபவியா விட்டாலித்தனை விரஹவானாயிருக்கிறவிவனை யினியாரநுபவிக்கக் கொள்ளுவரென்று ஹாஸமஹாமாகக்ஷேவிக்க இவ்விஶேஷணங்கள், இத்தனைஸௌந்தர்யனானவிவனை யாரைப்படாதாருண்டோ வென்றபிப்ராயம். அவன் - ஸௌஶீல்யஸ்வபாவனானவன், தன்னை - இப்படி நிரதிஶயவஸ்துவைவிஶிஷ்டனானதன்னை, யார்க்குக்கொடுக்கும் - எவர்களுக்குக்கொடுக்கப்போகிறான், இனியிவரை யநுபவிப்பாருண்டோவென்றபடி, யார்க்குக்கொடுக்குமென்கிறதினுடைய ஸ்வரவிஶேஷத்தாலே தன்னையநுபவிப்பார் நித்யஸூரிகள் ஸ்வப்ரகருண்டாயிருக்கச்செய்தே யென்பக்கலபிநிவேஶத்தாலே தன்னையெனக்குத்தந்தருளினானென்று வ்யஞ்ஜிதமாகிறது. ||௬||

மூ— செவ்வாயுந்திவெண்பற்சுடர்க்குழைதன்னொடு* மெவ்வாய்ச்சுடருந்தம்மின்முன்வளாய்க்கொள்ளச்*
செவ்வாய்முறுவலோடெனதுள்ளத்திருந்த* வவ்வாயன்றியானறியேன்மற்றருளே* ॥எ॥

ஆ— ஸௌந்தர்யமாகத்தந்தருளினனல்லனிறே, என்பக்கலுள்ள அவஸ்திதிவைலக்ஷண்யமிறேயென்கிறார். ॥கூ॥

(செவ்வாயுந்தி) இன்னமுமிவ்வவஸ்திதிவைலக்ஷண்யத்தையே விஸ்தரிக்கிறது, என்னோடுகலந்தருளின கலவியிலுள்ள நிரவதிகஸ்ப்ரீதியாலே திருப்பவளத்தினழகையும் மற்றுமுள்ள திவ்யாவயவ திவ்யபூஷணகதமான நிரவதிகதேஜஸ்ஸையு மெல்லாம்வளர்ந்து கொண்டிவைத்து என்முன்னே திருவுடவத்திலொளிவெள்ளம்பெருகப்புறப்படும்படியாகச் செவ்வாய்முறுவலோடெனதுள்ளத்திருந்த அவ்வவஸ்திதிவைலக்ஷண்யமல்லது மற்றொரு ப்ரஸாதத்தை ப்ரஸாதமாகமதிக்கிலேனென்கிறார். ॥எ॥

இ— ஸௌந்தர்யாதிகளில்லையென்று பரிச்சேதிக்கையாலே நிர்ஹேதுகத்வாதி ஸாத்விகவ்யதிரேகம் விரஹமென்றுகருத்து. இத்தாலுமிவ்விடத்தில் ப்ரீதியாலேசெய்தருளினதாகிலிறே நீர்க்கேளை கொண்டாடலாவது, ஸம்ஸ்லேஷத்தாலே செய்தருளினதாலோ வென்ன? இதுக்குத்தரமருளிச்செய்கிறாரென்று ஸங்கதியும்ஸம்பந்திகை. ॥கூ॥

✳ஏழாம்பாட்டு.✳

மணிக்குன்றமொன்றேயித்யாதியாலே ஐந்தாம்பாட்டிலுத்தரார்த்தத்தாலே சொன்னவர்த்தத்தையே சொல்லுகிறதாகையாலே யிப்பாட்டு பநராக்தியன்றோவென்ன வவதரிப்பிக்கிறார் (இன்னமித்யாதியால்) விஸ்தரிக்கிறதென்றது - ப்ரகாராந்தரேண வர்ணிக்கிறதென்றபடி. பேதைமை வர்ணிக்கைக்காகத் தன்னழகைக்காட்டியருளினபடியை யருளிச்செய்கிறார், இங்கேதம்மோடுகலந்த ப்ரீத்யதிசயத்தாலே யவனுக்கதிசயமாகவுண்டான ஔஜ்ஜ்வல்யத்தை யநுஸந்திக்கிறாரென்கை. பூர்வார்த்தத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னோடித்யாதி படியாகவென்னுமளவாலே) அதில் செவ்வாயுந்தி வெண்பல்லென்று ஸமஸ்தபதமாகவிருந்தாலும் செவ்வாய்முறுவலோடித்யாதியாலே இப்பாட்டு உத்தரவாக்யவைலக்ஷண்ய ப்ரயோஜனமாகையாலே உந்திமுதலான அவயவாந்தரங்களிற்காட்டில் திருப்பவளத்தில் ஸௌந்தர்யாதிசயம் விவக்ஷிதமென்று வ்யஞ்ஜிப்பிக்கைக்காக செவ்வாயைத்தனித்து நிர்தேசிக்கிறார் (திருப்பவளத்திலழகையுமென்று) உந்தியித்யாதி சுடரித்யந்தத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (மற்றுமித்யாதியால்) சுடர்தம்மிலுமென்றவயித்துத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (எல்லாமித்யாதியால்) முன்வளாய்க்கொள்ளவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்முன்னேயித்யாதியால்) திருமுகத்திலொளியென்று செவ்வாய்முறுவலோடென்கிறவிடத்தில் ஸாஹித்யார்த்தம். தாத்பர்யத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவ்வவஸ்திதிவைலக்ஷண்யாத்யதியால்) ॥எ॥

✳எட்டாம்பாட்டு.✳

எம்பெருமானுக்குத் தம்பக்கலுள்ள வ்யாமோஹாதிசயத்தைப்பேசி யநுஸந்திக்கவந்தவிவர் இப்பாட்டிலே

ஸ— செவ்வாய் - சிவந்ததிருப்பவளம், உந்தி - திருநாபி, வெண்பல் - வெளுத்ததிருமுத்துக்கள், சுடர் குழை - சுடரையுடைத்தானகுழைகள், காந்திராசிகளான ப்ரகாசமுடையனவென்றபடி. தன்னொடு - தன் என்று ஸாஹித்யார்த்தம். இவைகளோடேயென்றபடி. சுடருமென்கிறவிடத்தில் உகாரத்தை தம்மிலென்கிறத்தோடேயந்வயிப்பது. எவ்வாய்ச்சுடர்தம்மிலும் - எவ்வெவ்விடத்திலுள்ள தேஜஸ்ஸுக்களிற்காட்டிலும், வாய் - இடம் - தம்என்று ஸாமாந்யார்த்தம். செவ்வாயுந்திமுதலான அவயவங்களோடேகூட மற்றுள்ள ஸர்வதிவ்யாவயவங்களிற்காட்டிலுமென்று பதார்த்தம். முன் - என்னுடைய முன்னே, வளாய்க்கொள்ள - வளைத்துக்கொள்ளும்படி, ஜ்யோதிஸ்ஸு ஸர்வாவயவதேஜஸ்ஸைக்காட்டிலு மதிகமாக விஜ்ரும்பித்தென்முன்னே ஸர்வாவயவத்தையும் வ்யாபித்துக்கொண்டு ஔஜ்ஜ்வல்யமாக முறுவல்காந்தி புறப்படும்படியென்று பதார்த்தம். செவ்வாய்முறுவலோடு - என்னோடுஸம்ஸ்லேஷித்த நிரவதிகப்ரீதியாலுண்டான சிவந்ததிருப்பவளஹாஸத்தோடே, எனதுள்ளத்திருந்த - என்னெஞ்சிலே யெழுந்தருளியிருந்த, அவ்வாயன்றி - அவ்விடமொழிய, இப்படி என்னெஞ்சிலேயெழுந்தருளியிருந்த அவஸ்தையொழியவென்றபடி. அவ்வவஸ்திதிவைலக்ஷண்யமொழியவென்கை. மற்றருள் - மற்றுள்ளகருணைகளை, யானறியேன் - நானொருகருணையாக எண்ணேனென்றபடி. ॥எ॥

மூ—அறியேன்மற்றருளென்னையாளும்பிரானார்* வெறிதேயருள்செய்வர்செய்வார்கட்குகந்து* சிறியேனுடைச்சிந்தையுள்மூவுலகுந்தன்* நெறியாவயிற்றிற்கொண்டுநின்றொழிந்தாரே* ॥அ॥
வயிற்றிற்கொண்டுநின்றொழிந்தாரும்யவரும்* வயிற்றிற்கொண்டுநின்றொருமூவுலகுந்தம்* வயிற்றிற்

ஆ—(அறியேன்மற்றருள்) இப்படியநிருவிஷ்ணுவைக்கொண்டு தன்னுடையஸர்வேஶ்வரத்துக்குங்கூட என்னுள்ளே புகுந்திருந்தருளுகைக்கு ஹேதுவென்னென்றால் ஒரு ஹேதுவின்றியே வெறிதேசெய்தருளினானென்கிறார். ॥அ॥
(வயிற்றிற்கொண்டு) ஸம்ஸர்களையும், ஸம்ஸாதஸக்திகளான பதார்த்தவர்களையும் பதார்த்தவர்

இ—சிலருக்கு நிர்ஹேதுகமாக க்ருபைசெய்தருளுவனென்று நித்தைச்சொல்லுகை யஸம்மமன்றோவென்ன வகரிப்பிக்கிறார் (இப்படியிவ்ருநியால்) அதில் ஸநிருவிஷ்ணுவைக்கொண்டென்கிறவிதால் ப்ரதமவாக்யார்த்தமும் தன்னுடைய விஷயநிலாக்ருத்தாலே உத்தராயத்தினர்த்தமும் ஸங்க்ரஹீதமாயிற்று. இப்பாட்டிற்கு த்விதீயவாக்யார்த்தத்திலே தாத்பர்யமாய் மற்றெல்லாம் வருபேக்ஷாநுவாதமாயிருக்குமென்று காட்டுகைக்காக அவற்றை இச்ஶப்தகாவாக்ருத்தாலே ஸங்க்ரஹித்தது. த்விதீயவாக்யத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஒருஹேதுவ்ருநியால்) எனக்கென்று விஶேஷித்துச்சொல்லாதே செய்வார்கட்கென்று ஸாமாந்யேந சொன்னது தம்மைப்போலே ஸத்ருஶ்யரான சிலர்பக்கலவனுக்கு இதுஸ்வபாவமாகையாலிது உபலக்ஷணமென்று வ்யஞ்ஜிப்பிக்கைக்காக என்றுகருத்து. இவ்வாக்யார்த்தமனுவதத்தைப்பார்த்தால் தம்பக்கலுள்ளஹேது ஸதிஶயவிஷயமாகையாலே இதொருவ்யாஜமாத்ரமென்றுகருத்தாலே ஒருஹேதுவுமில்லையென்கிறாரென்று திருவுள்ளம். ॥அ॥

## ✻ ஒன்பதாம்பாட்டு. ✻

வயிற்றிற்கொண்டுநின்றொருமூலகுமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸம்ஸர்களையுமென்று) வயிற்றிற்கொண்டுநின்றென்று மூவுலகுக்கு விஶேஷணஞ்சொன்னத்தால் ஹவித்வார்த்தத்தையருளிச்செய்கிறார் (ஸம்ஸாதஸக்திகளானவென்று) இதுபதார்த்தவனுக்கும் ஜநங்களுக்கும் ஸாமாந்யவிஶேஷணமாகையால் பஹுவசநவசனம். வயிற்றிற்கொண்டுநின்றொழிந்தாருமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பதார்த்தவனையுமென்று) பாட்டிலே பஹுவசநமாயிருக்கையாலே பதார்த்தவனையு

ஶ—என்னை- ஸத்ருஶநிஹீநனை வென்னை, ஆளும் பிரானார்- அடிமை கொண்டருளுகிற உபகாரகர், சிறியேனுடை- ஸத்ருஶனை வென்னுடைய, சிந்தையுள்- மனஸ்ஸிலே, இதுக்கு நின்றொழிந்தாரென்கிறதோடே ஸம்பந்தம். மூவுலகும்- த்ரிவிதசேதநங்களையும், த்ரிவித விஷயஸ்தாநங்களையுமென்றபடி. நெறியா- முறையாக, ஶேஷஶேஷிபாவ முறைதப்பாமலென்றபடி. நம்முடைமையென்கிற அபிமானமுடையவராயென்கை. தம்வயிற்றிற்கொண்டு என்றநயிப்பது- தம்முள்ளே யரித்துக்கொண்டென்றபடி. அவற்றையும் கூடக்கொண்டென்கை. நின்றொழிந்தார்- ஸ்திரமாக வெழுந்தருளியிருந்துவிட்டார், ஒழிந்தாரென்கிறதற்கு ஸத்ருஶநிஹீநனை வென்பக்கல் அஸம்பாவிதமான விதையும் செய்தருளிவிட்டாரென்று கருத்து. செய்வார்கட்கு- தம் செய்யவேண்டினவர்களுக்கு, தாம் க்ருபைசெய்தருள நினைத்த ஜநங்களுக்கென்றபடி. வெறிதே- நிர்ஹேதுகமாகவே, அருள் செய்வர்- க்ருபைசெய்தருளுவர். ஆதலாலென் பக்கலுமிப்படி செய்தருளினானென்று கருத்து. மற்றருள்- வாதஸ்வத்ஸிகமான க்ருபையை, அறியேன்- ஒருக்ருபையாக நினையேன். ॥அ॥

ரு— வயிற்றில்கொண்டுநின்ற- காக்ஷிக்குள்ளே நிறப்பித்துக்கொண்டிருந்த, நிறைவென்கிறவிடத்தில் அகாரம்ஸம்யியிலே லுப்தமாயிருக்கிறது. ஒரு- ஸர்வாதிரோவரங்களான, ஸகிவித்ருவநங்களானவென்றபடி. மூவுலகும்- க்ருதகம் அக்ருதகம் க்ருதகாக்ருதகம், என்று த்ரிவியங்களான லோகங்களையும், பதார்த்தஸாதநங்களான லங்களையும் என்றபடி, வயிற்றிற்கொண்டு நின்றொழிந்தாரும் - தேவகிநந்தநாதிரூபேண வ்யஷ்டியாகக்கடவ ஜீவஸமஷ்டியெல்லாம் தங்கள்ஶரீரத்துக்குள்ளே நிறம்பியிருக்கும்படிநின்று அதனாலே ஐஶ்வர்யதயா க்ருதக்ருத்யராயிருந்த பதார்த்தவர்களையும், ப்ரஹ்மாக்கள் நாபீபத்தில் ஜநிக்கும்போது வ்யஷ்டிஜீவராகக்கடவ ஜீவஸமஜ்ஞரிதவிமஹராயிறே ஜநிப்பது. ஒழிந்தாரென்கிறபதத்தாலே க்ருத

மூ — கொண்டுநின்றவண்ணங்கின்றமாலை* வயிற்றிற்கொண்டுமன்னவைத்தேன்மதியாலே* ॥௯॥
வைத்தேன்மதியாலெனதுள்ளத்தகத்தே* யெய்த்தேயொழிவேனல்லேனென்றுமெப்போது* மொய்த்தேய்
திரைமோதுதண்பாற்கடலுளாந்* பைத்தேய்சுடர்ப்பாம்பணைநம்பரனையே* ॥௰॥

ஆ — ஜ்ஞாநாதிகளான ஸ்வஸ்வரூபாநுகுணமான ஸமஸ்தஜந்துக்களையும் ஸ்வஸங்கல்ப ஸஹஸ்ரைகதேசத்திலே நிபதித்தருளுகிற வெம்பெருமான்படியை யறிந்துகொண்டேனிறே யென்கிறார். ॥௯॥
(வைத்தேன்மதியால்) அவன்படியெங்ஙனேயாகவறிந்ததென்றால், ஸ்ரீதர்பக்கல் ஸந்நிவிஷ்டனாயிருக்கை

இ — மென்கிற வசநவசநம் ஜாதூஹிஷ்டாயம். யதா - ஜைவஸ்வஶநக்ஷமாய் பதார்த்தவர்களையுமென்று பொருளாகவுமாம். இவ்விடத்தில் வயிற்றிற்கொண்டுநின்றென்கிறவித்தால் ஹரித்தவஸ்துத்தை யருளிச்செய்கிறார் (பதார்த்தவர்ஜைத்யாதியால்) யவரு மென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தேவத்யாதியால்) த்ருதீயவாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸ்வஸங்கல்பத்யாதியால்) சதுர்த்தவாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அறிந்துகொண்டேனிறேயென்று) இத்தால் எட்டுபாட்டாலும் ப்ரதிபாதித்தவர்த்தத்தை ஸாராம்ஸநாவஸாநமாக்கிறாரென்று ஸம்ஹிதஸம்ப்ரதிபத்தி. ॥௯॥

✵ பத்தாம்பாட்டு ✵

வைத்தேன்மதியாலென்று கீழ்ப்பாட்டிற்சொன்ன வர்த்தத்தைச் சொல்லுகிறதாகையாலே யிப்பாட்டு பௌநருக்தியன்றோவென்ன விதுக்குத் தாத்பர்யஞ்சொல்லுகைக்காக வவதரிப்பிக்கிறார் (அவனித்யாதியா ல்) கீழ்ப்பாட்டில் ஜகதுபாதாநத்வம் அவன்படியாகத்தோற்றுகிறதேயாகிலும் ஆழ்வார் தம்பக்கலவனுடைய ஸந்நிவேசாதிசயத்தை யநுஸந்திக்கிற விப்ரகாரணத்திலே ஜகதுபாதாநத்வாநுபவத்தை ஸநாதநமாய்க் கைஸம்மதமல்லாமையாலே அவன்படியெங்ஙனேயாகவறிந்ததென்று ஸம்சயிக்கை உபபந்நமாகையால் அதைவெளியிடுகிறதிப்பாட்டென்றுகருத்து. அங்கு பரக்கஞ்சொன்னது இப்படி பரக்கமிருக்கச்செய்தே ஸ்ரீதர்பக்கல் ஸந்நிவேசமவனுக்கு ஸ்வபாவமென்று கொண்டாடுகைக்காகவென்று திருவுள்ளம். திருவ னந்தாழ்வானோடு ஸம்ஸ்லேஷஞ்சொல்லுகிற உத்தரார்த்தத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸ்ரீதே

ஶ — க்ருதக்ருத்யம்தோற்றுகிறது. ப்ரத்யேகம் பதார்த்தவிஷேசஸமவநம். யவரும் - எல்லாரையும், தேவ மநுஷ்யாதிகளையுமென்றபடி. தம்வயிற்றிற்கொண்டு - தம்முள்ளேயடக்கிக்கொண்டு, தம்முடைய ஸங்கல்ப ஸஹஸ்ரைகதேசத்திலே யடக்கிக்கொண்டென்றபடி. நின்றவண்ணம்நின்ற - பூர்வத்தானிருந்தப்ரகாரமே யிருந்தவனை, இத்தால் ஒருசூயாஸமுந்தோற்றாமல் நிர்வ்யாஜனாயிருந்தவனையென்றபடி. மாலை - ஸர்வேச்வ ரனை, மதியாலே - ஸம்யக்ஜ்ஞாநத்தாலே, கொண்டு - ஸ்வீகரித்து, வயிற்றில் - என்னுடைய ஹ்ருதயத்திலே, மன்ன - ஸ்திரனாயிருக்கும்படி, வைத்தேன் - வைத்துக்கொண்டேன், த்ருடமாகஅறிந்துகொண்டேனென்றபடி. ॥௯॥
௰ மொய்த்து - நிபிடமாய், எய் - தரங்கங்களான, ஏயென்று தரங்கவாசகம், திருவனந் தாழ்வான் திருவுடம்புக்கு தரங்கங்களான வென்றபடி. திரை - தரங்கங்களானவை, மோது - மோதா நிற்கிற, ஸ்பர்சநம்பண்ணாநிற்கிற வென்றபடி. தண் - சீதளமான, பாற்கடலுள் - க்ஷீரஸமுத்ரத்திலே, ஆலென்று வாக்யபூரணம். பைத்து - பசைத்து, பசை - ஸ்நேஹம்விரிக்கை. நித்யஸூரிஸமாச்ரயணீயமான ஸம்ஸ்லேஷஜநிதஹர்ஷநாதிசயபலஸமுத்தனனையென்றபடி. எய்சுடர் - ஏற்றசுட ரையுடையவனை, ஸ்வேதீவரவிந்தவகாந்தியெந வரஹாரவமாய்க்கொண்டு திவ்யமங்களவிக்ரஹ காந்திக்கு உசிதமானகாந்தியை யுடையவனையென்றபடி. பாம்பு - திருவனந்தாழ்வானை, அணை - சயந மாக வுடையவனை, நம்பரனை - நம்முடையவுத்க்ருஷ்டனை, எல்லாருங்காணத்திருப்பாற்கடலிலே வந்து திருவனந்தாழ்வான்மேலே நித்யமாகக்கண்வளருகையாலே நமக்கு ப்ரகாசிதமான ஸ்ரீதஸம்ஸ்லேஷா திசயோத்கர்ஷத்தை யுடையவனை யென்றபடி. எனது - மதீயமான, உள்ளத்து - மநஸ்ஸினுடைய, அகத்தே - உள்ளே, மதியால் - ஸமீசீநஜ்ஞாநத்தால், வைத்தேன் - நிதிபோலே நிக்ஷேபித்துக்கொண்டேன், அறிந்துகொண்டே னென்றபடி. என்றும் - இனி ஸர்வதிநமும், எப்போதும் - ஸர்வக்ஷணத்திலும், எய் த்தே ஒழிவேனல்லேன் - விஸ்லேஷித்து விடுவேனல்லேன், எய்த்து - விஸ்லேஷித்து, ஏகாரம் வாக்யாலங்கா ரம், ஒருநாளும் ஒருக்ஷணமும் விடேனென்றபடி. ॥௰॥

மூ — சுடர்ப்பாம்பணைநம்பரனைத்திருமாலை* யடிச்சேர்வகைவண்குருகூர்ச்சடகோபன்* முடிப்பான்சொன்ன
வாயிரத்திப்பத்துஞ்சன்மம்* விடத்தேய்ந்துநோக்குந்தன்கண்கள்சிவந்தே* ॥கக॥

ஆழ்வார் திருவடிகளேசரணம்.

ஆ — யவன்படியென் றறிந்துகொண்டேன், இதவன்படியானபின்பு அவனோ டொருநாளும் விடேனல்லேனென்கிறார். ॥ம॥

(சுடர்ப்பாம்பணை) இத்திருவாய்மொழி ஸமஸ்த துஃகவிரோதி ஸம்ஸாரநிவ்ருத்தி விஷயமென்கிறார். ॥கக॥

திருக்குருகைப்பிரான்பிள்ளான் திருவடிகளேசரணம்.

இ — க்ருதியால்) த்விதீயவாக்யத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இதவன்படியி க்ருதியால்). ॥ம॥

✳ நிகமனம். ✳

சன்மம்விடவிக்ருதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸமஸ்த க்ருதியால்) ॥கக॥

ஈ — சுடர்ப்பாம்பணை - தேஜிஷ்டனை திருவனந்தாழ்வானை ஶயநமாகவுடையனை, நம்பரனை - நமக்குஸ்வாமியான, திருமாலை - ஸ்ரீய:பதியை. இதுக்குச் சொன்னவென்கிறத்தோடே யந்வயம். இத்திருவாய்மொழியிலே ஸம்ஸாரபயங்கொண்டுமவர்களுக்கு ஸர்வஜ்ஞன் அநந்தஶாயி ஶ்ரீபாஸஹஸ்ரனென்று கருத்து. வண் - ஸம்ருத்தமான; குருகூர் - திருநகரியில், சடகோபன் - ஆழ்வாரானவர், அடிச்சேர்வகை - திருவடிகளிலேசேரும்படியை, முடிப்பான் - முடித்துக்கொள்ள இச்சையுடையவராய், தமக்குநிறைவேற்றிக்கொள்ள விச்சையையுடையவராய்க்கொண்டென்றபடி. சொன்னவாயிரத்து - அருளிச்செய்தவிஸ்ஸஹஸ்ரத்திலே, இப்பத்தும் - இந்தபத்துப்பாட்டும்; பாட்டுகளுக்கு கவிநர்த்தநஸ்வாபாவிகம் வகாரம், இத்திருவாய்மொழியானதென்றபடி. இதற்குநோக்குமென்கிறத்தோடே யந்வயம். சன்மம் - ஜந்மமானது, ஸம்ஸாரமானதென்றபடி, அறத்தேய்ந்து - மிகவும்க்ஷயித்து, விட - விட்டுப்போம்படியாக, தன்கண்கள்சிவந்துநோக்கும் - கோபத்தாலே தன்நேத்ரங்கள் சிவந்தவைகளாய்ப்பார்க்கும், தன்னுடைய த்ருஷ்டிவாத்ஸல்யத்தாலே நஶிப்பிக்குமென்றபடி, இது ஸர்வ நிவ்ருத்திஸம்ஸாரநிவர்த்தகமென்கை. ॥கக॥

ஜ்ஞாநவைராக்யநிஷ்டாநஶேஷயிஸ்ரீமதேதாஶரதிஜ்ஞாநஸஹாசார்யாய நம:.

ஸ்ரீ:

த்ருதீயோபநிஷத்தாத்பர்யரத்நாவளி:.

(இருத்தும்வியந்து.)

ஸத்யகாமத்வதக்ஷகத்வாத் த்ரிஜகதயிககாருண்யதோ ரோமஹாவாக்
நீலாஸ்ரித்ய வ்யூஹாக்வஜநகத்தநிஜாத்ஸ்வஜநவ்யூஹகாக் ।
ஊருஸ்வீத்ருஷ்டிதகாஸ்துதிஸ்தக்ருதிஷ்வாதகிரிதாநஶ்ரு ஹகாக்
ஸ்வாநாமவிதாநவாயாக்வஜநஹ்ருதிரோதாஶயவேஶ்மத்வாவக் ॥கஅ॥

(ஸத்யகாமத்வ) இருத்தும்வியந்தென்னையி க்ருதி - ஆஶ்ரிதர் அபிமதத்தபடியே செய்யுமவனாகையாலும், (தக்ஷகத்வாத்) பெருந்தாள்களிற்றுக்கருள்செய்தபெருமான் - ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்கு ரக்ஷகனாகையாலும், (த்ரிஜகதயிககாருண்யத:) அருள்தானினியானறியேனி க்ருதி - ஆஶ்ரிதர்க்கு தேஜோதேஶ்வர்யத்தைக்காட்டிலு மதிகமாக க்ருபைபண்ணுமவனாகையாலும், சயவா- தான் ஆஶ்ரிதஹ்ருதயத்திலேயிருந்து க்ருபைபண்ணுமதுவே தனக்கு தேஜோதேஶ்வர்யாதிகமாக வெண்ணுமவனாகையாலும், (ரோமஹாவாக்) ஆயனமரர்க்கரியேறெனதம்மான் - அமர்வறுமமரர்களுக்கு அதிபதியானதான் ஹாவாஜனுக்கொண்டு ரவர்களோடே பொருந்தியிருக்கையாலும், (நீலாஸ்ரித்ய வ்யூஹாக்) திகழுமணிக்குன்றமொன்றேயொத்துநின்றான் - நிரவயிகதேஜோபந்தமான நீலரத்நவர்ணம்போலேயிருக்கிற திருமேனியையுடையவனாகையாலும், (ஸ்வஜநகத்தநிஜாத்ஸ்வஜநவ்யூஹகாக்) பொருள்மற்றெனக்கி க்ருதி - ஸ்வாஶ்ரிதர்க்கு ஸாத்மீகம்பண்ண வல்லவனாகையாலும், (ஊருஸ்வீத்ருஷ்டிதகாஸ்துதி) செவ்வாய்முறுவலோடெனதுள்ளத்திருந்த ஊருஸ்விதத்தோடே யாஶ்ரிதஹ்ருதயத்திலேயிருக்கையாலும், (ஸ்தக்ருதிஷ்வாதகிரிதாநஶ்ரு ஹகாக்),

ஈ— தா— வெறிதேயருள்செய்வர் செய்வார்கட்குகந்து - தனக்கு ஸ்வாமியரம்படியான ஸாத்விகனிடத்திலே யவிஹிதமாகவந்து க்ருபைபண்ணுமவனுகையாலும், (ஸ்வாநாம்ஸித்தநவாயாக) மன்னவைத்தேன்மதியாலே - வைத்தேன்மதியாலென துள்ளத்தகத்தே - ஸ்ரீகருடைய அநுஸந்தாநத்தாலே யவர்களுடைய ஹ்ருதயத்தில்நின்றும் போமாட்டாமையாலும், எம்பெருமான் ஸ்ரீவரோடேகலந்து அவர்கள் ஹ்ருதயத்திலே தானே நிரதனாயிருக்கிறானென்று 'இருத்தும்வியந்து' என்கிற தஶகத்திலே யாழ்வாரருளிச்செய்தருளினாரென்கிறார். ||கஅ||

ஸ்ரீமதே நிகமாந்தமஹாதேஶிகாய நம:

ஆழ்வார்திருவடிகளே சரணம்.

எட்டாம்பத்தில் ஏழாந்திருவாய்மொழி முற்றிற்று.

*

# எட்டாந்திருவாய்மொழி.

மூ— கண்கள்சிவந்து பெரியவாய் வாயுஞ்சிவந்து கனிந் துள்ளே* வெண்பலிலகுசுடரிலகு விலகு மகரகுண்டலத்தன்*

ஆ—(கண்கள்சிவந்து) என்னோடே ஸம்ஶ்லேஷித்த ஸம்ஶ்லேஷத்தினுடைய ஸௌந்தர்யமாகத்தன்னுடைய நிரவதிகமான வழகைக்காட்டி என்னைவஶீகரித்துக்கொண் டென்னுள்ளே யிருந்தருளினானென்கிறார். ||க||

எட்டாந்திருவாய்மொழி.

இ— முதற்பாட்டுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னோடேயித்யாதியால்) அதில் நிரவதிகமானவழகையென்கிறவித்தாலே ஆழ்வாரனுபவித்ய ஸம்ருத்தமாயிற்று. *

முதற்பாட்டு.

என்னைவஶீகரித்துக்கொண்டென்கிறவித்தாலே அடியேனென்கிறபதத்துக்குத் தாத்பர்யஞ்சொல்லிற்றாயிற்று. கீழ்த்திருவாய்மொழியிற்காட்டில் இத்திருவாய்மொழிக்கு அர்த்தபேதமும்ஸங்கதியும் இரண்டாம்பாட்டுக்குமேல் வ்யாக்யானத்திலேகண்டுகொள்வது. ||க||

பத— கண்கள் சிவந்து- மாயக்கூத்தனிலென்னோடு விஶ்லேஷத்தாலே விவர்ணங்களாயிருந்த திருக்கண்கள் இருத்தும் வியந்திலென்னோடு ஸம்ஶ்லேஷிக்கப்பெற்ற ஸந்த்ருப்தியத்தாலே அரவிந்தராஜீவங்கள்போலே ஆதாம்ரங்களாய், பெரியவாய்- பெரியதுகளாய், என்னைக்கண்ட ஹர்ஷாதிஶயத்தாலே உத்புல்லங்களாயென்றபடி. வாயுஞ்சிவந்து- திருக்கண்கள் மாத்ரமன்றிக்கே ஸ்மிதவிகஸிதமான திவ்யாதரமும் அதிகாருண்யமாய், கனிந்து- பழுத்து. அத்யுஜ்ஜ்வல ஸ்நிக்த கோமளமாயென்றபடி. உள்ளே- இந்த திவ்யாதரத்துக்குள்ளே, அதிரமணீய திவ்யாதர காந்திப்ரவாஹச் சுழியிலே யகப்பட்டுள்ளே புகமாட்டாதே வெளியிலேநின்று பின்னையும் திருமுகத்தினொளியை யநுபவிக்கையில் ஸ்வாரஸ்யத்தாலே கையை நீட்டிக்காட்டுகிறார் உள்ளேயென்று. வெண்பல்- வெளுத்ததந்தங்களுடைய, அதிநவவித்ருமாரணமான திவ்யாதரத்துக்குப் ஸாம்யமாம்படி முக்தாமணிபோலேயிருந்துள்ள திருமுத்துக்களுடைய வென்றபடி. இலகு- விளங்காநின்றுள்ள, சுடர்- காந்தியையும், இலகு- விளங்காநின்றுள்ள, கல்லோலசோபையைக்கு நீராஜநரத்ந தீபங்கள்போலே விளங்காநின்றுள்ள வென்றபடி. விலகு-அஸையா நின்றுள்ள, ஹர்ஷபாரவஶ்ய ஸம்ஸ்பந்திதவதநமண்டல ஸம்ஸ்லிஷ்டங்களாகா நின்றுள்ளவென்றபடி. மகரகுண்டலத்தன்- மகராகாரங்களை யுடையவனை, குண்டலத்தையுடையவன் குண்டலத்தன், இலகுசுடர் ஶப்தத்துக்கும் இலகு விலகுமகர குண்டல ஶப்தத்துக்கும் அம்ஶஸாமா யதின்மேல் ஏகாவயவத்வம் பிறந்திருக்கிறது. வாயுஞ்சிவந்து கனிந்து விலகு மகராகாரத்தை யுடையவனைவென்று ஸம்போதிக்கிறது. திருக்கண்கள் திருவதரங்கள் திருமுத்துக்கள் திரு மகராகாரங்களென்றிப்படி சுற்றிலும்வர்ணிக்கிற விப்ரதிபத்தி... க்கு ஸமஷ்டிரூப திவ்யசோபைகளினுடைய காந்தியானது வர்ணிக்கைக்கு நிலமன்றென்று ...

மூ—ஒடியாவின்பப்பெருமையோனுணர்விலும்பரொருவனை* ॥௨॥
உணர்விலும்பரொருவனை யவனதருளாலுறற்பொருட்டென்* னுணர்வினுள்ளேயிருத்தினேனதுவுமவன தின்னருளே*

ஆ—வைத்து என்னுடைய நிகர்ஷத்தையும் தன்னுடைய உத்கர்ஷத்தையு மநுஸந்தித்து தன்னோடுகல ந்துபரிமாறுகைக்கு நானிடமல்லேனென் றகலுகிறேனென்னும்ஸபத்தாலே யென்னால்தன்னைவிட முடியாததொரு படி தன்னழகைக்காட்டிக்கொண்டு என்னுள்ளேபுகுந்தருளுகையன்றியே என்னுடம்பினுள்ளேயும் புகுந்த ருளினானென்கிறார். ॥௨॥

(உணர்விலும்பர்) இப்படியெம்பெருமான் செய்தருளுகைக்கு ஹேதுவென்னென்னில்? என்னிஷ்டாநிஷ்டமே காரணமாகச்செய்தருளினான், அதுதானென்னாலேவந்ததொன்றன்று, அதுவுமவனுடையப்ரஸாதத்தாலே

இ—த்தென்கிறதற்குபுகுந்தருளினானென்கிறத்தோடே யந்வயம். இத்தனைவைலக்ஷண்யனானவன் அடியேனுள் ளானுடலுள்ளானென்கிற வித்தனைஸம்ஶ்லேஷிப்பது க்ருபாதிஶயமுண்டானாலல்லது கூடாமையாலே அடி யேனிருந்ந்நிவாக்யத்தில் ஸூசிதமாகிற வர்த்தத்தையருளிச்செய்கிறார் (என்னுடையவிந்நிஷ்டபடி யென்னுமளவாலே) அடியேனுள்ளானென்று கீழ்ச்சொன்னதை யநுபாஷிக்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கி றார் (தன்னழகையிந்நிஷ்டமன்றியேயென்னுமளவாலே) இதுவேபாட்டுக்கு ஸங்கதியும் ஆயிற்று. ॥௨॥

✳ மூன்றாம்பாட்டு. ✳

என்னெஞ்சிலிருந்தருளினானென்று கீழ்ச்சொன்னவர்த்தத்தையே சொல்லுகிறதாகையாலே இவ்வாறு வர்த்தம் வ்யாக்யாநமென்ன விதுக்குத் தாத்பர்யஞ்சொல்லுகைக்காக வவதாரிப்பிக்கிறார் (இப்ப டியிந்நிஷ்டயால்) இருத்தினேனிந்நிஷ்டத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னிஷ்டந்நிஷ்டயால்) அதுவு மிந்நிஷ்டக்குத்தாத்பர்யமருளிச்செய்கிறார் (அத்தானிந்நிஷ்டயால்) இத்தால் கீழ்த்திருவாய்மொழியிலேவெறிதே

ப—துன்பம்- துக்கம், ஆத்யாத்மிகாதிஸம்ஸாரஹேதுமானவென்றபடி. நேர்மை- ஸாராம்ஶம்போலி ருக்கிற, ஆத்யாத்மிகாதிஜோஷாஹேத நிஷ்க்ருஷ்டஸாராம்ஶம்போலிருக்கிறவென்றபடி. இது பெருமைக்கு விஶேஷணம். ஒடியா- ஒடியாததான, ஹ்ரஸ்வமல்லாததானவென்றபடி. நித்யமானவென்கை. இன்பப்பெ ருமையோன்- ஆநந்தோத்கர்ஷத்தையுடையவனை. பெருமையுடையவன் பெருமையோன், உணர்வில்- ஜ்ஞா நத்தில், உம்பரொருவன்- உபரிஷ்டர்க்குள்ளே அத்விதீயன், ஸர்வஜ்ஞத்திலே நித்யஸூரிகளைக்காட்டி லும் அதிகனான ஸர்வேஶ்வரனென்றபடி. இவனுடையஜ்ஞாநம் அநந்யாதீநமிறே. அடியேனுள்ளான்- எ ன்னுள்ளிராநின்றான், இப்படி ஸர்வப்ரகார ஸேஷாஹனானவன் கிடீர்! என்பக்கலாஸக்தியாலே என்னெஞ்சி லேவந்திருந்தருளினானென்று வடி தாத்பர்யம். உடலுள்ளான்- அவ்வளவன்றிக்கே என்னுடையஶரீரத்தி லுமிராநின்றானிதென்னவாஶ்சர்யமென்றபடி. உடல்- ஶரீரம், என்னுள்ளென்றுசொல்லாதே அடியேனுள் ளானென்றருளிச்செய்கையால் ப்ரத்யக்ஜ்ஞாநஸாநந்தஸாதிகளிற்காட்டில் ஶேஷத்வமேவ ஸ்வரூபமாயிருக்கை யே ஆத்மவஸ்துவுக்கு நிருபாதிகஸாரதம நிரதிஶயகல்யாணமான ஸ்வரூபநிரூபகதர்மமாகையா லிவ்வாத்மாவை யெப்போதும் அடியேனென்றே அநுஸந்திக்கவேணுமென்றதாயிற்று. ॥௨॥

ஸ உணர்வில்- ஜ்ஞாநத்தில், உம்பர்- உபரிஷ்டர்களுக்கும், ஜ்ஞாநவத்தர் ஸர்வோத்க்ருஷ்டரான நித்ய ஸூரிகளுக்குமென்றபடி. ஒருவனை- அத்விதீயனை, அவர்களுக்கு நிர்வாஹகனான ப்ரதானனானவனை யென்றபடி. இத்தால் ப்ராப்யாகாரஞ்சொன்னபடி. "அடியார்கள் குழாங்களை யுடன் கூடுவதென்று கொலோ" வென்றிறேயிவர் ப்ரார்த்தித்தது. அவனதருளால்- ததீயக்ருபையாலே, ப்ராபகமுமவன் க்ருபை யென்றபடி. உறல் பொருட்டு- கிட்டுகிறத்தின் பொருட்டு, உறல்- கிட்டுகை, ஸம்ஶ்லேஷிக்கைக்காகவென்றபடி. என்னுணர்வினுள்ளே- என்னுடைய ஜ்ஞாநத்துக்குளே, உதாரநிவஜ்ஞாநத்துக்குள்ளே யென்றபடி. இருத் தினேன்- ப்ரதிஷ்டிதராக்கிக் கொண்டேன், மிகவுமிஷ்டத்தேனென்றபடி. 'என்னைத்தன் பொன்னடிக்கீழிருத் துமென்றருத்தி' த்தென்று கீழ்த்தாமர்த்தித்தபடியை யிங்கே யநுபாஷிக்கிறதென்கையுவிதமாகையாலே யென்னுணர்வினுள்ளே யிருத்தினே னென்கிறதற்கு இஷ்டத்தேனென்று பொருளாகை உசிதம். அது வும்- இந்த இஷ்டதானும், அவனது- ததீயமான, இன்னருளே- ஸௌஹார்த்தமான க்ருபையே, "க்ருபா

மூ — முதலைத் தேனும்பாலுங்கன்னலுமமுதுமாகித்தித்தித்தென் ஊனிலுயிரிலுணர்வினினின்றவொன்றை யுணர்ந்தேனே ॥ ச ॥

ஆ — னென்கிறார். ॥ ச ॥

'உணர்வுமுயிருமுடம்பும்' என்றுதொடங்கி நாலாம்பாட்டகப்பட ஸூத்ரிகாத்யாஹமாய் நிர்தேஶத்தை ஸம்ஸ்லேஷமாகப் பண்ணிக்கொண்டுபோந்தது, இனி இதன்நிர்தேஶமும் ஸூத்ரவ்யாக்யமேயாகிறது.

இ — நித்யஸ்தவாமாக வேண்டுகையால் யானுந்தானாயென்று ப்ரஸ்துதமான ப்ரத்யஸ்தவிஷுடைய ஸாஜாத்யவாமாய் வாச்யத்விஷயஸம்பந்தங்களோடு ஸாமாநாதிகரண்யத்தாலே தஸ்ய ஶரீரவாச்யத்வமென்றுகருத்து. இங்ஙனன்றிக்கே இது கேவலதிவ்யாத்மஸாஜாத்யமாகில் மனனகமலமற பாட்டிற்போலே யிங்கேயும் வாஸ்யமாக நிர்தேஶிக்கலாமிறே. ஆனாலும் உணர்வில் நின்றவென்கிறவளவும் திவ்யாத்மஸாஜாத்யவாமாய் ஒன்றையென்கிறமேல்வாக்யமொன்றுமாத்திரம் ஜீவஶரீரகவாச்யத்வமாகலாமே யென்னில்? அப்போது "யானுந்தானாயொழிந்தானை" யென்கிறதைக்கொண்டு வாநராகிறோம். தேனும் பாலுமித்யாதிகளான கீழ்வாக்யங்களோடேகூட இப்வாக்யமும் ஜீவஶரீரகவாச்யத்வ மென்னும்வக்ஷத்திலும் இப்வாநராக்தி தாஷ்யமன்றோவென்னில்? வாச்யத்வப்ரகாரஸம்பந்தஸாத்தாவினுடைய நிரதிஶயபோக்யத்திலே வாக்யத்துக்குத் தாத்பர்யமாகையாலே வாநராக்தியில்லையென்று திருவுள்ளம். ॥ ச ॥

✳ ஐந்தாம்பாட்டு. ✳

மேற்பாட்டுக்களில் நிர்தேஶங்களில் வாஸ்யமன்றிக்கே கேவலநவாஸகங்களாயே யிருக்கையாலே கீழ்ப்பாட்டிற்சொன்ன ந்யாயம் வழிபாமையாலிவை ஸம்ஸ்லேஷங்களாகக்கூடாதே ஜீவாத்மஸாஜாத்யவாங்களென்னில் ஜீவஶரீரகவாச்யாநுஸவ ப்ரகரணத்துக்கு இப்பாட்டுகள் சேராதொழியுமேனென்ன? வருளிச்செய்கிறார் (உணர்வுமித்யாதி) கீழ்ப்பாட்டுகளிலும் நிர்தேஶம் ஸம்ஸ்லேஷமானாலும் தாத்பர்யம் ஸம்ஸ்லேஷமின்றிக்கே ஸூத்ரார்த்தத்திலேயாகையால் ப்ரகரணத்துக்கு இவைசேராமையில்லையென்றதாயிற்று. கீழ்ப்பாட்டில் நிர்தேஶித்தது ஸாத்மஶேஷதைக ரஸகவாநாஸம்யாதாத்ம்யமாகையாலே மேல் விஶேஷலக்ஷண்யாகாரங்களை அநுஸந்திக்குமிடத்தில் அப்படி நிர்தேஶித்தது மநவெக்ஷிதமென்றுகருத்து. வடாதிவிஷயத்தில் ஶாஸ்த்ரீயாதிஶப்தங்கள்போலே வாச்யத்விஷயத்தில் வேதநாவேதநவாதிஶப்தங்களெல்லாம் வெவக்ஷிகநிர்தேஶங்களாகையாலே யதாவிவக்ஷம் நிர்தேஶிக்கக்குறையில்லை.

ஶ — வென்றபடி. இங்கு ஸ்ருஷ்ட்யாதி வ்யாபாரத்தைச் சொன்னது; ஸர்வசேதநர்களுக்கும் விஶேஷித்து அவர்களில் ப்ரயோஜநரான பாகவதர்களுக்கும் அவர்களுடைய ஜ்ஞாநமாக ப்ராக்ருதமான வெவஶப்தாரகத்தைக் கொடுத்துநடத்துகிறவன், அங்ஙனன்றிக்கே; என்னையொருவனையும் விஶேஷண கடாக்ஷித்து நான் தன்னோடு ஸாயுஜ்யமென்கிற ஸாமாவஸ்தத்தையும் தனக்குங்கூட நிரதிஶயபோக்யனென்கிற கல்யாணகுணத்தையு மெனக்குக்காட்டித்தந்தருளினனென்கைக்காக. தேனும்பாலும்- மதுவும் க்ஷீரமும், கன்னலும்- இக்ஷுவிகாரமும், போக்யமுமென்றபடி. அமுதுமாகி- அம்ருதமுமாய், தித்தித்து- ரஸித்து, அத்யந்த போக்யமாயென்று வடதாத்பர்யம். இன்னார்க்கென்று விஶேஷியாமையாலே ஸர்வேஶ்வரனுக்கும்கூட போக்யனென்றபடி. இவ்வாக்யம் "ஸோஶ்நுதே ஸர்வாந்" மென்கிற ஶ்ருதியினுடைய அநுஸந்தாநம் வாக்யத்துக்கு விவரணமாயிருக்கிறது. இதற்குநின்றவென்கிறதோடே அந்வயம். என்னூனில்- என்னுடைய ஶரீரத்திலே, ஊன்- மாம்ஸம், இங்கே ஶரீரவாசம். உயிரில்- ப்ராணனுக்குள்ளே, உணர்வினில்- பாஹ்யிலே, யதார்த்தக ஜ்ஞாநத்திலேயென்றபடி. நின்ற- ஸம்பந்தித்திருக்குமதான, இங்கு ஊனில் உயிரிலென்று அந்நமய ப்ராணமயங்களைச் சொல்லுகையாலும் மேல் நின்றவொன்றையென்று விஜ்ஞாநமயனைச்சொல்லுகையாலும் நடுவே உணர்விலென்று ஜ்ஞாநஸ்வரூபமான மநோமயனைச்சொல்லுகிறதென்று அவிதமாயிருக்கும். இதுமேல்பாட்டில், அந்நமய ப்ராணமய மநோமயங்களுக்கும் அதிரிக்தனென்று ஆசார்யர்களருளிச்செய்ததற்கும் சேரும். ஒன்றை- ஒரு விலக்ஷணவஸ்துவை, ப்ரத்யகாத்மஸாஜாத்யத்தையென்றபடி. தஸ்ய ஶரீரகவாசவாஸ்யனை யென்கை. உணர்ந்தேனே- அவனுடைய ப்ரஸாதத்தாலே கண்டுகொண்டேனே, ॥ ச ॥

மூ— எய்த்தாரெய்த்தாரெய்த்தாரென்றில்லத்தாரும்புறத்தாரும் * மொய்த்தாங்கலறிமுயங்கத்தாம்போகும்போ

ஆ— ஆத்மஸாக்ஷாத்காரலக்ஷணமாயிருந்த மோக்ஷம் கைவரும், இப்படிசெய்யாதார்க்குக் கைவாராது, அவர்கள்ஸம்ஸரித்தேபோமித்தனையென்கிறார். ॥அ॥

(எய்த்தார்) இவ்வாத்மஸாக்ஷாத்காரலக்ஷணமோக்ஷம்மாத்ரம் ஐஹிகபோகமாத்ரத்தாலே கைவராத

இ— ச்செய்கிறார் (ஆத்மஸாக்ஷாத்காரலக்ஷணமித்யாதியால்) கைவருமென்றது ஐஶ்வர்யமாத்ரமென்றபடி. வ்யதிரேகவிஷயமஸம்மதமாகையால் உபாஸநநிஷ்டர்க்கு ஆராமமோக்ஷம் ஸுலபமென்று வந்ததாத்பர்யம். அதுக்குத் ஸ்ருதித்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இப்படிசெய்தார்க்கித்யாதியால்) இத்தால் "ஜ்ஞாநாதந்ந்ய... ஜ்ஞாதவ்யாந்தரநிஷ்டாஸ்" என்கிறஉக்தியிலே ஐந்தாம்பாட்டிலே ஆத்மயாதாத்ம்யம் ஸாக்ஷாத்கரிக்கும் ஜ்ஞாநமென்னுமிடத்தையும், ஆறாம்பாட்டில் பொருமநஸ்ஸ்... மென்னுமிடத்தையு மருளிச்செய்தவ ரிப்பாட்டிலே உபாயமஸம்வ[illegible] ...வைகுண்டத்தினுடைய ஶ்ரேஷ்டதமத்வத்தை வெளியிட்டபடி. உ... ஸ்வாமியாயிருந்துள்ள ஆத்மஸாக்ஷாத்காரஜ்ஞாநத்தைக் கிடைரெனக்கு ஶ்ரீக்ருஷ்ணமாகத்தந்தருளிஞனென்று வனுடைய ஔதார்யத்தை ஶ்லாகிப்பிக்கிறரென்று ஸமதிஸந்திதெ. ॥எ॥

❋ எட்டாம்பாட்டு. ❋

கீழ்ப்பாட்டிற்சொன்ன ஸாயுஜ்யத்துக் கபிலஸ்தத்தை யுபபாதித்துக்கொண்டு இப்பாட்டு கீழ்ப்பாட்டுக்கு ஶேஷமாகிறதென்று ஸங்கதிகாட்டாநின்றுகொண்டு பாட்டுக்குத் தாத்பர்யமருளிச் செய்கிறார் (இவ்வாத்மேத்யாதியால்) இதில் அந்திமத்ஶேயிலே என்கிறவித்தாலே பொழியும்போது உகத்துக்கை

ஶ— போனவர்கள்தானே, "கதிநிஜஜ்ஞாஸாஸ்ஸு ஸம்ஸாரபரிவர்த்தி ஜநா! ஜோஷ்யஶ்ரேயாமிக்காஸ" என்கிறபடியே ஜந்மஜராமரணாதி வரிவ்ருத்திபாலே ஸ்வாகாராய்க்கிடப்பர்களென்றபடி. அவஸ்தைப்பாலே யத்ஸங்காம் ஸம்ஸாரநிவ்ருத்திவிபக்ஷிதெ, இப்படி ஸாயுஜ்யப்பெற்ற உத்க்ருஷ்டமான ஆத்மஸாக்ஷாத்காரத்தை க்கிடைரெனக்கு ஶ்ரீக்ருஷ்ணிப்பித்தருளிஞனென்றுகருத்து. ॥எ॥

ஶ எய்த்தாரெய்த்தாரெய்த்தாரென்று— இளைத்தாரிளைத்தாரிளைத்தாரென்று, ஐயோ இவர்முடிந்தார்முடிந்தாரென்று என்றபடி. இதுக்கு அலற்றி என்கிறத்தோடே சம்பந்தம். ஆதிதாநாகாரத்துக்குக் கருத்தென்னென்னில்? வாஸவாஸரான ஸாமாந்யாதிகள் வருந்தனைவன் முடிவதுதங்களுக்குநெஞ்சிலே பிடிக்காயிருக்கையாலே யிவனுக்கு ஶாஸ்த்ரமர்யாதைக்கேற்கப்பதற்குமுன்னே உத்ஸாஹமெங்ஙனே பண்ணி முடிந்தான் முடிந்தானென்று பலகாலும் கூப்பிட்டுப் பின்னையும் கலங்கப்பண்ணுவார்கள். ளித்தனைபோக்கி ஶ்ரவணவேதையாலே இவன்கலங்கின தசையிலே நெஞ்சுதெளிந்து ஆசுவஸ்யமான பகவத்விஷயத்தை நினைக்கவல்லனும்படிபண்ணுவார் ஒருவருமில்லையென்று கருத்து. இல்லத்தாரும் - க்ருஹத்திலேயிருக்கிற ஸாமாந்யாதிகளும், இல்லம் - க்ருஹம், இவன்தானிருந்தநாளிவர்களுக்கு ஒன்று ம்கூடாமையாலே யினியிவன் முடிந்தாலிந்த க்ருஹம் நமக்கு ஸ்வாதீநமென்று இருக்கிற ஸாமாந்யாதி களுமென்றபடி. புறத்தாரும் - க்ருஹத்துக்குப் புறம்புள்ளவர்களும், இவன் க்ருஹத்துக்குப்புறம்பாய் மற்றவ்வூரிலிருக்கும் ஜநங்களுமென்றபடி. இவனும் ஸாமாந்யாதிகளான ஸம்பந்தியும் பொருமையாலே யிவன் முடிந்தாலாகாதோ வென்றிருக்கிற பஹிஜநங்களுமென்கை. மொய்த்து- ஸம்ஹமாக ஸஞ்ஜீவித்து, க்ராணத்துக்களைத்தாலும் வாராதாரிதுக்குத் தாங்களேவந்துவிழுவர்களென்று கருத்து. ஆங்கு- அந்த தசையிலே, இவனுக்கு ஜ்ஞாநங்கலங்குகிற உத்க்ரமணதசையிலே யென்றபடி. அலறி- இவனுக்குள்ள தெளிவும்போம்படி ஶப்தகோஷமாக வோயாதே கூக்குரலம்பண்ணி, இன்னம் ஜீவிக்கஸம்பவமுண்டான தசையிலே பயத்தாலே ப்ராணன்போம்படி யாக்ரோஶம்பண்ணு நிற்பர்களென்றுகருத்து. முயங்க- மேலேவிழ, மேல்மேல் விழுந்துக்கட்டிக்கொள்ள வென்றபடி. அந்த ஆக்ரோஶத்துக்குத் தப்பியிருந்தகுறை ப்ராணனும்போம்படி ஶ்வாபதங்கள்போலே விழுந்து கட்டிக்கொள்ளுவரென்று கருத்து. தாம் போகும்போது- தாங்கள் போகிறபோது, இந்த ஸாமாந்யாதிகளையும் ஸ்வஸ்யத்தையும் விட்டுப்போகிறோமேயென்று நெஞ்சிங்கேயிழுக்கத் தங்களால் மீளவொண்ணாமையாலே தாங்கள்ஶாஸ்த்ரம் ஶரீரத்தைவிட்டு

மூ—உன்மத்தர்போற்* பித்தேயேறியநுராகம்பொழியும்போதெம்பெம்மானோ* டொத்தேசென்றங்குள்ளங்
கூடக்கூடிற்றாகினல்லுறைப்பே* ॥௮॥
கூடிற்றாகினல்லுறைப்புக்கூடாமையைக்கூடினா* லாடற்பறவையுயர்கொடி யெம்மாயனாவததுவதுவே*

---

ஆ—து, ஐக்யத்தெசையிலே ஸமவஸ்த்ரா நாகாராத்தாநுஸந்தாநமும் வேண்டுமென்கிறார். ॥௮॥

(கூடிற்றாகில்) பரத்வபாரதந்த்ர்யாகாரத்தாலே ஸாத்ருச்யாபத்தியே ஸாம்யமென்று சொல்லுவானென்? தகுமன்றோவென்னில், பரத்வபாரதந்த்ர்யனுக்கு மிவ்வாத்மாவுக்கும் ஐக்யங்கூடுவது ஸாவாஸாவங்களுக்கைக்யங்கூடிலன்றோ, ஆகலால் அவனுமவனே இவனுமிவனே அவனிவனாகக்கூடாது,

---

இ—ஸம்ப்ரஹீதம், ஸமவஸ்தாநாகார ஐக்யாதிபால் எம்பெருமானோடொத்தேசென்று என்கிறது வ்யாக்யாநம், ஶேஷிண ஶேஷம் வ்யாவ்ருத்தம். ॥௮॥

## ✳ ஒன்பதாம்பாட்டு. ✳

ஸாத்த்விகனுடைய ஶமதமாதிகளையும் உபாஸநாதிகளையு மநுஸந்தித்து அம்மைவத்தாலே இவனுடைய ஜீவாத்மதத்தைக் கொண்டாடாநிற்கிற வாழ்வார் இப்பாட்டிலே ஜீவபரயொரைக்யங் கூடாதென்று பேசுகை யஸம்மதமன்றோவென்ன வவதரிப்பிக்கிறார் (பரமைகத்வாதியால்) எம்மாயனாவதென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பரத்வபாரதந்த்ர்யனுக்குமிக்யாதியால்) கூடாமையைக் கூடினாலென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸாவேகத்யாதியால்) ஸாவாஸாவவத்ஸ்வபாவதயா வ்யாவ்ருத்தவஸ்துக்களாக ஜீவபரயொரைக்யங் கூடாதென்றுகருத்து. அதுவதுவேயென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆதலா

---

மூ—ப்போகிற தசையிலே யென்றபடி. உன்மத்தர்போல்- உந்மாதம்கொண்டவர்களைப்போலே, பித்தேயேறி- ஜ்ஞாநமே ஸ்வபாவமாய், எத்தனையேனும் விவேகமருங்கூட உந்மத்தரைப்போலே அறிவுகெட்டென்றபடி. அநுராகம் பொழியும்போது- அநுராகம் வர்த்திக்கும்போது, ஸமவஸ்த்ரணம் வழியாதபடி தாங்களாக்ருதங்களைப்பண்ணின ஶாஸ்த்ரமன்றிக்கே இளையாளை பொன்னையும் பூட்டிக்கொண்டுவந்து முன்னேநிறுத்துவர்களாகையாலே இவனுக்கு ஸாத்ய ஸாதநங்க ளில்லாதேபோன ஶாஸ்த்ரமன்றிக்கே விபரீதமாக அநுராகவ்ருத்தி யுண்டாய்விடுகிறதென்று கருத்து. எம்பெம்மானோடு- ஸ்வஸ்வாமியான பரத்வபாரதந்த்ர்யனோடே, ஒத்தேசென்று- ஸமாநமாகவேநடந்து, அவனோடு ஸமாநமாகவே அநுபவித்து என்றபடி. அவனைப்போலே இவனையும் ஜ்ஞாநாநந்தஸ்வபாவனாக அநுபவித்துக்கொண்டென்கை. அங்கு- அந்த ஸாதர்ம்யத்திலே, உள்ளம்- மநஸ்ஸானது, கூட- சேருகைக்கு, வ்யாப்திக்கைக்கு என்றபடி. கூடிற்றாகில்- வடிக்குமாகில், அநுராகம் பொழியும்படியான அந்த அவஸ்த்தையிலே சித்தம்தெளிந்திருந்து இப்படி ஶப்தஸ்பர்ஶ ஶுத்தவிஷயமாக வடித்ததாகிலென்று வ்யாக்யாநம். இத்தனை அநுஸந்தாநத்திலே யிதுகூடுகை அதிஶயமென்று கருத்து. நல்லுறைப்பு- நல்லவாய்ப்பு, நல்ல லாபமென்றபடி. ஶுத்தாவிஶேஷத்வமுண்டாமென்று கருத்து. ॥௮॥

ஶ கூடிற்றாகில்- ஶுத்தஸ்வாமிநோ ஸாத்ருச்யம்வடித்ததாகில், நல்லுறைப்பு- நல்லவாய்ப்பு, ஸஜீவநலாபமென்றபடி. ஸர்வேஶ்வரனோடு ஸம்பந்தமே பாரதந்த்ர்யமென்றிருப்பார்க்கு அவனோடு ஸாதர்ம்யங்தானே லபித்துவிட்டால் மஹத்தரலாபமன்றோவென்கை. இது ஸாவஸமத்வமான வுபாஸநம். ஆடற்பறவை- ஆடாநிற்கிறபக்ஷியை, ஸர்வேஶ்வரனுக்கவாஹநமான விஹகமாயிருக்கப்பெற்ற ஸந்தோஷாதிஶயத்தாலே யாடாநின்றுள்ள பெரியதிருவடியையென்றபடி. உயர்கொடி- உச்ச்ரிதத்வஜமாகவுடையவனை, தான்ஸர்வேஶ்வரனென்று தோற்றும்படி வேதாத்மாவான ஶ்ரீகருடனைத்தனக்கு விஹகத்வஜ வாஹநமாக வுடையவனனவென்றபடி. எம்மாயனாவது- நம்முடையவாஶ்சர்யபூதனாவது, ஜீவஸ்வரூபமானதுஉபரிஷ்டம். இஜ்ஜீவஸ்வரூபமானது ஆஶ்ரிதரான நமக்கநுபாவ்யனாய் ஆஶ்சர்யபூதஸ்வரூப ஶ்ரீகுணவிஷ்டாதிகளையுடைய ஸர்வேஶ்வரனாய்விடுவதென்றபடி. கூடாமையை- ஸம்பவியாதவஸ்துத்தை, ஸாவாஸாவயொரைக்ய ஶேஷிஷாண ஶமதமாதிகளையென்றபடி. கூடினால்- வடிக்கப்பெற்றால், எம்மாயனாவதென்று கீழோடேஸம்பந்திக்கிறது. இவை ஸம்பவியாதாப்போலே ஜீவபரயொரைக்யமும் ஸம்பவியாதென்றுகருத்து. அது அதுவே- அந்தஸ்வஸ்வரூபம் ஸ்வஸ்வரூபமே, வேறொருஸ்வரூபமாக மாட்டாதென்றபடி.

மூ— மணாளன்மலர்மங்கைக்குமண்மடந்தைக்கும்* கணாளனுலகத்துயிர்தேவர்கட்கெல்லாம்* விணாளன்விரும்பியுறையுந்திருநாவாய்* கணாரக்களிக்கின்றதிங்கென்றுகொல்கண்டே* ॥ரு॥

கண்டேகளிக்கின்றதிங்கென்றுகொல்கண்ட* டொண்டேயுனக்காயொழிந்தேன்றுரிசின்றி* வண்டார்

ஆ— (மணாளன்) லக்ஷ்மீபூமிநீளாநாயகனுய், தேவர்களான நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனுய், ஸ்ரீவைகுண்டநிலயனான எம்பெருமான் விரும்பியுறையுந்திருநாவாயை இப்ப்ரக்ருதியோடே கண்ணாரக்கண்டு களிப்பதென்றோவென்கிறார். ॥ரு॥

(கண்டே) எனக்காகத்திருநாவாயைக் கோவில்கொண்டுநிற்கிற கோவலர்கோவே? உன்பக்கலிலே ஸநந்த

✳ ஐந்தாம்பாட்டு. ✳

இ— இப்பாட்டிலே லக்ஷ்மீபூமிகளைச்சொன்னது உபலக்ஷணமென்னுங்கருத்தாலே (நீளா) ஸங்க்ரஹம். இப்படி பாட்டுத்தோறும் பிராட்டிமாரை யநுஸந்திக்கையாலே ஸாநுஜாநிகமென்கிற மங்கலஸம்ஸ்மரணமித்திருவாய்மொழிக்கு ப்ரதிபாத்யமென்றுஸூசிதம். "ஸாநுஜ ப்ராயயஸ்யலஸாநுஜாநிஃ" என்று உபநிஷத்பாஷ்யத்திலே "விஷ்வ்வீஸக்ராஸாநுநஸ்யஹா" என்கிற வாக்யத்தின் வ்யாக்யாநத்திலே நாராயணமுநி கள் வெளியிட்டருளினாரிறே. இத்திருவாய்மொழியிலே பிராட்டிமார்க்கு ஸாநுநயம் கணோக்தமன்றுகி லும் ஸ்வபாவத்தாலே ஸிஜிக்குமிறே. த்விதீயபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தேவர்க் ட்கிரியால்) இங்கென்கிறபதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இப்ப்ரக்ருதியோடேஎன்று) இச்ச ரீரத்தோடேயென்றபடி. கண்ணாரக்கண்டி த்யாதியாலே கீழ்ப்பாட்டிலே தத்வஜ்ஞருடைய [illegible] யபேக்ஷித்தவரிப்பாட்டிலே தமிழோதியான திவ்யநகரத்தினுடைய தர்சநத்தை யாசைப்படுகிறாரென் று ஸங்கதிசொல்லிற்றாயிற்று. இரண்டாம்பாட்டில் வைகுண்டநாதனும் திவ்யநகரப்ரவேசநமும் உபாதா நமித்ததாகையாலே யிங்கு வ்யாக்யாநமில்லை. ॥ரு॥

✳ ஆறாம்பாட்டு. ✳

திருநாவாயித்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (எனக்காகவித்யாதியால்) த்விதீயபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (உன்பக்கலிலேயித்யாதியால்) த்ருதீயபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார்

ஸ— வரப்புதுகிறமிதன்மறியேனென்றபடி. ॥௪॥

ரு மலர்மங்கைக்கும்- பத்மவாஸிநியான பெரியபிராட்டிக்கும், மங்கை- யௌவநி, மண்மடந்தைக்கும்- பூமிப்பிராட்டிக்கும், மடந்தை- ஸ்த்ரீ, மணாளன்- நாயகனான, உலகத்து- லோகத்திலுள்ள, உயிர்தேவர்கட்கெல்லாம்- ப்ரஹ்மாதிப்ராணிகள் தேவர்களென்கிற ஸமூஹங்களுக்கும், கணாளன்- நிர்வாஹகனான, விணாளன்- பரமவ்யோமத்தையுடையவன், விண்- பரமவ்யோமம், ஸ்ரீவைகுண்டநாதனானவனென் றபடி. விரும்பி- ஸ்ரீவைகுண்டத்திற்காட்டிலும்ஆதரித்து, உறையும்- வஸிக்கும்ஸ்தலமான, திருநாவாய்- அ ந்ததிவ்யநகரத்தை, இங்கு- இந்தலோகத்திலே, இச்சரீரத்தோடேயென்றபடி. கணார- கண்கள்விடாய் தீர்ந்து த்ருப்தங்களாம்படி, கண்டு- கண்ணாலேகாணப்பெற்று, களிக்கின்றது- ஆநந்திப்பது, என்றுகொல்- என்றைக்கோ? அதிப்போதேவரவேணுமென்று ப்ரார்த்திக்கிறபடி. [கண்ணாளன் விண்ணாளன் கண்ணார என்ப வை இடைகுறைந்துகிடக்கிறது] ॥ரு॥

௬ வண்டார்- வண்டுகளாலே ஆர்ந்தவையான, ஹரிவ்ருக்ஷஸந்தாநங்களானவென்றபடி. மலர்ச்சோ லைகள்சூழ்- ப்ரவேஷ்டநங்களாலே பரிவ்ருதமான, திருநாவாய்- அந்ததிவ்யநகரத்தை, கொண்டே- ஸ்வீகரியாநின்றுகொண்டே, ஸ்வயாரணமயோமவ்யவஸ்தவாரம் இது ஆழ்வாரை வசீகரிக்கைக்குயோக்ய மானதேசமென்று திருவுள்ளத்தாலே நிஷ்கரியா நின்றுகொண்டென்றபடி. உறைகின்ற- அங்கேவஸியா நிற்கிறவனை, எம்- எங்களுடையவனை, ஆசிரிதர்க்கெல்லாம் ஸாதாரணனென்றபடி. கோவலர்கோவே- கோபாலநாயனே, கோவென்று நாயன், துரிசு- கபடம், ப்ரயோஜநாந்தரப்ராவண்யமாகிற கபடமென்றபடி. இன்றி- இல்லாமல், தொண்டேயென்கிறவிடத்தில் ஏகாரத்தை உனக்குஎன்கிறத்தோடே கூட்டிப்பது. உனக்கே- நிரதிசயபோக்யனானவுனக்கே, ஸ்வயாரணமத்யோமவ்யவஸ்தவாரம், தொண்டாயொழிந்தேன்- ஸ்வாதந் த்ரியத்தை விட்டேன், ஒழிந்தேனென்று "வரிஷ்டஸாவஷ்டாபமிச்சாஸ்வாதந்த்ர்யஹீந" மென்கிறகணக்கிலே

மூ — அருளாதொழிவாயருள்செய்தடியேனைப்* பொருளாக்கியுன்பொன்னடிக்கீழ்ப்புகவைப்பாய்* மருளே யின்றியுன்னையென்னெஞ்சத்திருத்துந்* தெருளேதரு தென்றிருநாவாயென்றேவே* ॥அ॥
தேவர்முனிவர்க்கென்றுங்காண்டற்கரியன்* மூவர்முதல்வனொருமூவுலகாளி* தேவன்விரும்பியுறையுந் திருநாவாய்* யாவரணுகப்பெறுவாரினியந்தோ* ॥கூ॥

ஆ — யானிவன்' என்று விஷயீகரித்தருளி, அடியேனையுன் பொன்னடிக்கீழ்ப் புகவைத்தருளுவாய், வைத்தருளாதொழிவாய், திருவுள்ளமானபடிசெய்தருள், என்றுகொண்டு எம்பெருமானையின்னதாகிறார். ॥அ॥

(தேவர்) ப்ரஹ்மாதிகளுடைய சக்ஷுராதிகரணங்களுக்கும் அகோசரனாய், ப்ரஹ்மாதிஸ்ருஷ்டராந ஸமஸ்த ஜகத்ஸ்திதிகாரணபூதன ஸம்ஹாரகனான எம்பெருமான் விரும்பிக்கொண்டு ஸர்வகாலமும் ஸாந்நித்யம்பண்ணியுறைகின்ற திருநாவாயை அணுகப்பெறுமவர்கள் என்னஸாமர்த்யம்பண்ணினார்களோ, நான் ஸாமர்த்யஹீனனாயிழந்தே

இ — அருளாதொழிவாயென்று) ஸவிகாஸமருளிச்செய்கிறார் (திருவுள்ளப்படியாகில்) இன்னதாகிறாரென்று - வெறுக்கிறாரென்றபடி. கீழ்ப்பாட்டிலே தாமபேக்ஷித்தபடி பெறாமையாலே திருவுள்ளங்கலங்கி யிப்பாட்டிலே எம்பெருமானைவெறுக்கிறாரென்று ஸங்கதிசொல்லிற்றாயிற்று. ॥அ॥

✳ ஒன்பதாம்பாட்டு. ✳

ஆக்ஷேபவாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ப்ரஹ்மாத்யாதியால்) அதீதவாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ப்ரஹ்மாதிஸ்ருஷ்டவரெத்யாதியால்)இனி என்கிறவாதத்தாலே ஸூசிதமாகிறவர்த்தத்தையருளிச்செய்கிறார் (நானித்யாதியால்) இத்தால் கீழ்ப்பாட்டில் தாம்வெறுத்துச்சொன்னவிடத்திலு மவனொருவிசேஷ கடாக்ஷம் பண்ணாதொழிந்தவாறே யிப்பாட்டிலே வ்யதிதராகிறாரென்று ஸங்கதியுஞ்சொல்லிற்றாயிற்று. ॥கூ॥

ஶ — மருளேயின்றி- அஜ்ஞாநமேயில்லாமல், மருள்- அஜ்ஞாநம், ஏகாரம் ஸாகல்யநிவ்ருத்திவ்யவச்சேதகமாய்க்கொண்டு க்ருத்ஸ்நநிவ்ருத்திவாசகம், அஜ்ஞாநகந்தமுமில்லாமலென்றபடி. உன்னை- ஸ்வப்ரயத்நஸாதநாதிகளாலே அவிஷயனானவுன்னை, என்னெஞ்சத்து- என்நெஞ்சிலே, இருத்துந்தெருளே- ப்ரதிஷ்டிதனாக்குகிற ஸத்ஜ்ஞாநத்தையே. தெருள்- ஸத்ஜ்ஞாநம், ஹேதோஜந்யமாய் உன்னை நிரந்தரமாக விஷயீகரிக்கிற ஸாக்ஷாத்காரத்தையேயென்றபடி. ஏகாரம் ப்ராக்ருதவிஷயஜ்ஞாநவ்யவச்சேதவாசகம். தரு- தந்தருளினவனான, மயர்வறமதிநலமருளினனென்றதை யநுவதித்தபடி. தென்திருநாவாய்- ஸுந்தரமான திருநாவாயிலேயிருக்கிற, தென்என்று ஸௌந்தர்யம், என்தேவே- என்னுடையதெய்வமே, தேவு- தெய்வம், எனக்குப்ராபகமும் ப்ராப்யமுமானவனேயென்றபடி. அருள்செய்து- என்பக்கலிலே க்ருபைபண்ணி, அடியேனை- உனக்கு நித்யசேஷபூதனானவென்னை, பொருளாக்கி- ஒருவஸ்துவாக்கி, பொருள்- வஸ்து, த்ருணாதிகளைப்போலே யுபேக்ஷியாதே ஸ்வீயத்வேந விஷயீகரித்தென்றபடி. உன்பொன்னடிக்கீழ்- உன்னுடைய ஸ்ப்ருஹணீயங்களான திருவடிகளின்கீழே, பொன்ஶப்தம் ஶ்லாக்யதயா ஸ்ப்ருஹணீயவாசகம், புக- ப்ரவேசிக்கும்படி, வைப்பாய்- வைத்தருள், அருளாதொழிவாய்- அப்படிக்ருபைபண்ணாதே தானொழிந்துவிடு, உனக்குத்திருவுள்ளமானபடி செய்தருளாயென்றபடி. வெறுப்பாலே அருளிச்செய்கிறபடி. ॥அ॥

(கூ) தேவர்முனிவர்க்கு- ப்ரஹ்மாதிதேவர்களுக்கும் ஸநகாதிமுநிகளுக்கும், என்றும்- ஸர்வகாலமும், காண்டற்கு- சக்ஷுராதிகரணங்களாலே காண்கைக்கு, அரியன்- அசக்யனானவன், ஸ்வப்ரயத்நத்தாலே அசக்யனானவென்றபடி. மூவர்முதல்வன்- ப்ரஹ்மருத்ரேந்த்ராதிகளுக்கும் காரணபூதனானவன், ஒரு- அத்விதீயனான, மூவுலகாளி- த்ரைலோக்யநிர்வாஹகனான, க்ருதகாக்ருதகாதிபேதேந த்ரிவிதங்களான ஸர்வலோகங்களுக்கும் நிர்வாஹகனானவனென்றபடி. தேவன்- தேவசப்தவாச்யன், ஸ்ருஷ்ட்யாதிலீலாபரனான ஸர்வேச்வரனென்றபடி. விரும்பி- ஆதரித்து, உறையும்- வஸிக்கிறவிடமான, ப்ரஹ்மாதிகளிற்காட்டிலும் ஸர்வப்ரகாரத்தாலுமுத்க்ருஷ்டனான ஸ்வாமி நித்யவாஸம்பண்ணுகிற தேசமென்று பாவம். திருநாவாய்- அந்தத்திவ்யநகரத்தை, இதுக்கு அணுகப்பெறுவாரென்கிறதோடே அந்வயம். இனி- நான்காணப்பெறாதேமுடிந்தபின்பு, அந்தோ- அய்யோ! தாம்காணப்பெறாமையாலே சோகிக்கிறபடி, அணுகப்பெறுவார்- கிட்டியநுபவிக்கப்பெறுவார், அணுகை- கிட்டுகை, யாவர்- ஆர்களோ! ஸாமர்த்யவான்களோவென்றபடி. அவர்கள் ஸாமாந்யரல்லர்; நித்யஸூரிகளென்றுகருத்து. [illegible]

ஸ்ரீ:.

த்ரமிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி:.

(அறுக்கும்வினையாயின.)

ஸூக்ஷ்மமத்யாம * ஸ்வவிதஸ்ரீமதேவாதிவ்யஜாயாம்
ஸம்ருத்யாதேவ்யஸ்வபத்யோமாதவ த்ராணதஸாஸாஹ்வயக்ஷோணிநந்த:।
ஸம்யாதாஸ்யாஸ்ஸபாவோயஜுஷி துரிதஹரஸ்வாஸ்ஸவோஸுஹாவா
ஸூக்ஷ்யா: ஸ்ரீஸம்ஸாரிஸ்ஸுயதிவஸாருஜ்ஜாநிஹாவேதநீயம் ॥௧௧௦

(ஸூக்ஷ்மமத்யாம) உ* கொடிபோலிடைக்கோகனகத்தவள்- கொடிபோலே நுண்ணிதான இடையையுடையவளாகையாலும், (ஸ்வவிதஸ்ரீமதேவாதிவ்யஜாயாம) ௩* திருநாரணன்- இங்கு வைபவமேனாஸாதிஸம்யம்சொல்லப்பட்டது. மேல் நாமவிஷயவுள்ஷருயும் சொல்லுகிறது. 'ஸ்ரீயதே ஸ்ரயதே ஸ்ருணோதி ஸ்ராவயதி ஸ்ருணாதி ஸ்ரீணாதி' என்கிற நிருக்திகளையுடைத்தாய் ப்ரதிஷ்டிதமான வ்யாகரணங்களிலே ப்ரஸித்தமான ஸ்ரீஸப்தத்தாலே வாச்யையாகையாலும், (ஸம்ருத்யாதேவ்யஸ்வபத்யோமாக) ௪* மண்ணண்மலர் மங்கைக்கு மண்மடந்தைக்கும்- மண்மடந்தையென்றது கீழும்மேலும்சொல்லும் நப்பின்னைக்குமுபலக்ஷணம் ஸம்ருத்தி நீளாதிகளை விபூதியாகவுடையவளாகையாலும், (அவதாரதஸாஸாஹ்வயக்ஷோணிநந்த்ஸாம்) ௭* மாவலியைநிலங்கொண்டாய் திருமாலே- அவதாரதசையிலே "தேவத்வே தேவதேஹேயம் மநுஷ்யத்வே ச மாநுஷீ। விஷ்ணோர்தேஹாநுரூபாம்வை கரோத்யேஷாத்மநஸ்தநும்" என்கிறபடியே அந்தந்ததசைக்கு அநுரூபமாக எம்பெருமானோடே அவதரிக்கையாலும், (ஸ்வதந்த்ரஸம்யாதாஸ்யாஸ்) ௯* திருமாலென்று- எம்பெருமான் ஆஸ்ரிதருடைய தோஷங்களைப்பாராதே அங்கீகரிக்கைக்குப் புருஷகாரபூதையாயிருந்து வடிப்பிக்குமவளாகையாலும், (ஸாவோயஜுஷ) அ* தெருளேதரு- வேதநனுக்கு ஜ்ஞாநாதிகுணவரிவாகத்தை யுண்டாக்குமவளாகையாலும், (துரிதஹரஸ்வாஸ) எ* தேவாசுரர் செற்றவனே- ஆஸ்ரிதர்க்கு விரோதிகளைப்போக்குமவளாகையாலும், (ஸவோஸுஹாவாக) கூ* அணுகப்பெறுநாள்- எப்போதும் ஸந்நிஹிதையாயிருக்கையாலும், 'ஜாதவேதஸம்' 'ஸௌஸ்யபக்ஷஸ்ரமதீம்' இத்யாதிகளிற்படியே நிரவதிகபோக்ஷத்வாதிகளையுடையவளாகையாலும், ஸர்வஸம்ருத்தையான பிராட்டிக்கு ஸ்வாமியான எம்பெருமானை ஸாக்ஷாத்நயான ஜாயையையுடையவனாக "அறுக்கும்வினையாயின" வென்கிறதஸகத்திலே ஆழ்வார் அருளிச்செய்தருளினாரென்கிறார். ॥௧௧௦॥

இத்திருவாய்மொழியிலே ஐந்துபாட்டுக்களிலே பிராட்டிஸம்பந்தம்சொல்லுகையாலே ஐந்துபாட்டுகளிலும் இதுவே விவக்ஷிதமென்று திருவுள்ளம்.

[*ஜ்ஞாதிஸ்வவிதஸ்ரீமதேவாதிவ்யஜாயாம்' ஜ்ஞாதம்' என்றுவாம். முதற்பாட்டில் குறுக்கும்வகையென்று ஸௌலப்யமும் ஆறாம்பாட்டில் கோவலர்கோவேயென்று அவதாரதஸாஸாஹ்வயமும் விவக்ஷிதம். இது பதினெண்ணாயிரத்தின்படி. ஸா என்பதை ஸர்வநாமமாகக்கொண்டு அதையுடையவளானது கொண்டு ஸாதீ என்று ஸங்கமாக்கி மேலே பஹுவ்ரீஹியாயிருக்கிறதென்று ஸ்ரீவேங்கடேஸாசார்யர் திருவுள்ளம். ஸம்பாதநவின்மேல் ஸாவேக்ஷிப்பண்ணி ஸ்வாஹநாஸஹ்யஸ்யாஸ்ஸாஸீஸ, என்றுதல் ஸ்வாஹநாஸ நித்யஜதி கதரிக்ஷிப்பண்ணி ஸாதீஸ என்றுதல், வைத்து தாத்ருஸீஜாயாயஸ்ய என்று ஆஸ்ரிதர்திறத்தில் ஸமஜமான விரக்தியுடையவளென்றுக்கருத்து. "ஸாதீஜ்ஜாநயெவிஷணே" என்னுமிடத்தில் ஸாயவன்இவ்வாறே வ்யுத்பாதநம்பண்ணினான். ஸாஷாஸாத்ருதீக்ஷயாமதாஃ ஸதிதேர்தநாமாநாஸ கதாகிவி ஸாதிஜ்ஞஸாதேஸ்ஸேவேந அவ்யாம்நாமங்களைவிவக்ஷித்து தேர்தநத்தையும்விவக்ஷித்துப் பொருளுரைக்கலாம். என்று நம்மாசார்யர்கள் அருளிச்செய்யும்படி.]

ஸ்ரீமதே நிகமாந்தமஹாதேஸிகாய நம:.

ஆழ்வார் திருவடிகளேசரணம்.

ஒன்பதாம்பத்தில் எட்டாந்திருவாய்மொழிமுற்றிற்று.

❦❦❦ * ❦❦❦

# ஒன்பதாந் திருவாய்மொழி.

மூ— மல்லிகை கமழ் தென்றல் ஈருமாலோ

ஆ— (மல்லிகை) இப்படி வ்யஸநமக்நரானவாறே அநுபாவதசையாலே தம்முடைய வ்யஸநத்தைப் பேசுகிறார். வண்டுவரைப்பெருமானோடே கலந்தாளொருபிராட்டி, அவன் பசுமேய்க்கப்போய் மீண்டுவரக்கடவிய அந்தியம்போதானதுவந்து அவன்றான் வாராமையாலே ஸத்ருஷ்ணஸோகமிக்கவளாய் மல்லிகைகமழ்தென்றல்.

ஒன்பதாந்திருவாய்மொழி.

இ— அறுக்கும்வினை, மல்லிகைகமழ், என்கிற இவ்விரண்டு திருவாய்மொழிகளிலும் விரஹவ்யஸநம் உண்டாயிருக்கக் கீழ்த்திருவாய்மொழியில் இல்லாத அநுபாவதசை இத்திருவாய்மொழியிலுண்டானபடியென்ன? என்ன அருளிச்செய்கிறார் (இப்படியித்யாதியால்) இப்படியென்றது— கீழ்த்திருவாய்மொழியிலாழ்வார் பஹுப்ரகாரமாகப் ப்ரார்த்தித்துப் ப்ராப்திக்கச்செய்தேயும் ஸாஹஸிகன் தம்பெருந்தொழிந்த விம்மலத்தாலேயென்றபடி. அவ்வநுபாவதசாப்ரகாரந்தானென்னென்ன? அதைக்காட்டாநின்றுகொண்டு முதற்பாட்டுக்கு ப்ரவேசஞ்செய்தருளுகிறார் (வண்டுவரையித்யாதியால்) அவன் பசுமேய்க்கப்போய் மீண்டுவரக்கடவிய அந்தியம்போதென்கிறவித்தால் விப்ரலம்பஸம்யோகமென்கிற ஸமயலக்ஷணமித்திருவாய்மொழிக்கு வ்யங்க்யமென்று ஸூசிதமாயிற்று. வாராமையாலென்றது— க்ஷணம்விளம்பிக்கையாலென்றபடி. ப்ராஹ்மணர்க்கு ஸந்த்யாவந்தநம்போலே இடையர்க்குப்பசுமேய்க்கை ஜாதிதர்மமாகையாலே தவிரவொண்ணாதிருக்கச்செய்தேயும் "கூடியதுர்வாஸஹஸ்ரக்கதம் ஸஹஸா கதஸ்ய" என்றிருக்கிற மஹாவதாரணிக்கு அந்தப்பகலெல்லாமொருபடிகழியப்பெற்று க்ருஷ்ணன் மீண்டுவரக்கடவிய ஸாயம்ஸந்த்யையும்வந்து க்ருஷ்ணனோடுவரக்கடவிய பசுக்களும்வந்துபுகுந்து க்ருஷ்ணஸஹவாஸோசிதஸம்பந்தங்களுடைய வேணுநாதவிநோதகோலாஹலங்களும் நெடும்போதுதுடங்கிக் கேளாநின்றவாறே அவன்வருகிறானென்று நிஸ்சயித்து ஸ்வசோபாஸந்நிதையாய் தான்ஸ்திரதேஹையாயிருக்கிற தசையிலே அதின்மேலே மல்லிகாதிஸுகந்தவஸ்து ஸமாவேசாதிகளும் ஸாயந்தநீயகமும் ஸாவஸிதவிசேஷங்களும் க்ஷணவிகவிதவிலக்ஷணஸம்பந்தங்களும் ஸீதாஸுந்தரபரிஸரமஹத்துக்கு ஸ்தாநங்களான வாஸஸ்யாதிகளும் மற்றுமுள்ள ஸஹஜவஸ்துக்களுமெல்லாம் ஸஜ்ஜங்களானவளவில் அவன் க்ஷணமாத்ரம்விளம்பித்தாலும் விரஹஸஹாவஸமம் ஸஹிக்கமுடியாதிறே. ஆதலால் க்ஷணமாத்ரம்விளம்பத்திலே அத்யந்தஸஹமானென்று கருத்து. இந்த ஸ்வாபதேசத்தில் ஸம்வேத்யமாவது:— எம்பெருமான் தம்மை விஷயீகரிப்பதுக்கு முன்னுண்டானகாலம். அக்காலத்தில் பாதகவஸ்துக்களாவன:— தம்மை விஷயீகரிக்கவபேக்ஷிக்கிற வெம்பெருமானுடைய ஸௌந்தர்யாதிகுணவிசேஷங்களும் பெரியதிருவடியுடைய வைலக்ஷண்யவிசேஷங்களுமவன்வரவுக்கு ஸூசகங்களான உபஸ்தாபகாதிநிமித்தங்களும், இவை பாதகங்களாகைக்குக்காரணம்- இவை அவன்வரவுக்கு ஸூசகங்களாயிருக்கச்செய்தே அப்போதே அவனைக்காணாமை, இது நஞ்சீயாருளிச்செய்த நிர்வாஹம். இந்த ஸ்வாபதேசப்ரகாரத்தை "ஸமயலக்ஷ்மவஸ்வாஸஸவிஸிமேவ ஸமாகதி தேஸிகஸ்யஸாதநம் திவ்யஸ்ரூதிவக்ஷ்யமாணம் ஸ்வாஜ்யஜேவகுயபதி தயாவ விஸவஸூ தெவே ஸந்நிதௌ தவி ஸுப்ரபூதே. ஊஹஸ:— திவ்யஸம்ப்ரதிபாதாதிஷ்டிநிதிஸி ஸ்வாமிநம் ஸ்ரூபயேத தேவாநாமி ஸாவஸாவவஹஸ் விக்ஷாஸய த்ரம்பாரம். க்ராவ்யப்ரதிஸம்ஸ்யூதிஃ க்ருதஜ்ஞ வெராபிதேஜேஸ்ரீயதே ராஜ்ஞாயாஸிஷி ராகிவாஹிகமமேண ராதிஸ்ரதவஸதிஃ" என்று ஸாரஸங்க்ரஹத்தில் தாத்பர்யத்திலே விஷ்ணுஸ்வாக்யத்தாலே ஆசாரியரும் ஸூசிப்பித்தருளினார்*

ப— மல்லிகைகமழ்- ஸ்ரீதெசுவரிதேஹியாகிற்கிற, கமழ்கை- வரிதேஹிக்கை, ஸ்ரீகாகாஸுத ஸளரப வாஸிநியானவென்றபடி; வயோவகாரணமான க்ருபாணயாமெக்கு மாலாஷணம்போலே யிருக்கிறது, தேபவஸீரத்துக்கு ஸ்ரீகாஸளரமேதெம்மென்றுகருத்து. ஸ்ரமணோதீயத்துக்கும் பாதகமாய் ஸங்கேதநோதீயத்தையும் வீசியாநின்றதென்றலிப்ராயம். தென்றல்- ஸேயஸீரமானது, ஈரும்- விதாரணம்பண்ணுகின்றது, என்னை உதிசேஷ. ஈருகை- செஷயீகரிக்கை, ஆல்- ஓ- கஷ்டம்! ஆலென்றும் ஓ!

மூ— னிகவிடத்தசுரர்கள்கூற்றம்வாரானினியிருந்தென்னுயிர்காக்குமாறென்* ।உ।
இனியிருந்தென்னுயிர்காக்குமாறெனிணைமுலைநமுகநுண்ணிடைநுடங்கத்* துனியிருங்கலவிசெய்தாகந்

ஆ— களையும்போக்கிக்கொண்டு ஸர்வாத்மாக்களையும் பலபடியால் ரக்ஷிக்கிற உபகாரசீலனான எம்பெருமான் வருகிறிலன், இனியிருந்து நானுஜ்ஜீவிக்கைக்குவாயமென்றென்கிறாள். ।உ।

(இனியிருந்து) தன்னுடையஸ்வரூபமான ஸௌந்தர்யாதிகுணங்களாலே யென்னைவசீகரித்து தன்னையொருக்ஷணம்விஶ்லேஷிக்கில் நிரவதிகது:க்கத்தைவிளைக்கு உத்ஸந்நஸம்ஶ்லேஷத்தைப்பண்ணி ஒரு

இ— த்ருதீயவாக்யத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸர்வேத்யாதியால்) ।உ।

* மூன்றாம்பாட்டு. *

கள்வத்தனியிளஞ்சிங்கமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தன்னுடையவித்யாதியால்) ஸூரி ஸமூஹத்தாலே ஸௌந்தர்யவாத்ஸல்யாதி ஸௌஹார்தாநந்தாமா ஸ்ரீதவாத்ஸல்யாதிகுணங்கள் விவக்ஷிதங்கள். தனிஸமூஹத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தன்னையித்யாதியால்) இருங்கலவியித்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அசிரேத்யாதியால்) அசிரஸமூஹத்திலே இணைமுலையித்யாதியினர்த்தமும்

ஈ— ஸ்ருஷ்டியை, இடம்- ஸ்ருஷ்டி, படைத்து- லோகஹிதார்த்தமாக ஸ்ருஷ்டித்து, இடந்து- அவாந்தரப்ரளயார்ணவத்திலேபாய் ஸம்ஹிதியிலே யொட்டிக்கிடந்தவத்தை வராஹரூபேணோத்தரித்து, உண்டு- ப்ரளய காலத்திலே வயிற்றிலேவைத்துரக்ஷித்து, புநஸ்ஸ்ருஷ்டிகாலம்வந்தவாறே உத்கரணம்பண்ணி, ஸ்ருஷ்டித்தென்றபடி. அளந்து- அத்தைமஹாபலி அபஹரித்தவாறே த்ரிவிக்ரமனாயளந்துமீட்டுக்கொடுத்து, எங்கும்- ஸர்வவிஷயத்திலும், நீசோச்சவிபாகம்பாராதே ஸர்வஜநவிஷயத்திலுமென்றபடி. அளிக்கின்ற- ரக்ஷகனாகிற, ஆயன்- கோபாலனானவன், வாரான்- என்னுடையவிரஹதசையிலும் வருகிறானில்லை, இனி- ஆபத்ஸகனானவன் வாராதொழிந்தபின்பு, இருந்து- இவற்றின் ஸந்நிதானத்திலேயிருந்து, என்னுயிர்- என் ப்ராணனை, காக்குமாறென்?- ரக்ஷிக்குமுபாயமேது; ஆறு- உபாயம், ஒருஉபாயமுமில்லையென்றபடி. ।உ।

கள்வ- வஞ்சகனான, ஸம்ஶ்லேஷதசையிலே ஸர்வஸ்வாபஹாரிகளான வாமலோசநாவலோகசேஷ்டிதங்களையுடையவனென்றபடி. தனி- அத்விதீயனான, "அப்ரமேயம்ஹிதத்தேஜோ யஸ்யஸாஜநகாத்மஜா" என்கிறகணக்கிலே என்னோடுஸம்ஶ்லேஷத்தாலே நிரதிஶயாநந்தபரிதனாய் அத்விதீயனென்று தோற்றும்படியிருந்தவனனென்றபடி. இளஞ்சிங்கம்- பாலஸிம்ஹமானது, ஸௌகுமார்யயௌவநஶோபித ஶௌர்யகுணநிதியாகையாலே பாலஸிம்ஹம்போலே அத்யாஹ்லாதகதர்ஶநீயனனென்றபடி. எம்- நம்முடையவனான, விதக்தசேஷ்டிதங்களான விப்ரமங்களாலே நம்மைவசீகரித்து நமக்கு ப்ராணநாயகனானவனென்றபடி. மாயன்- ஆஶ்சர்யசேஷ்டிதனான, விஶ்லேஷதசையிலே யென்னைப்பிரியமாட்டாதே அநவதிக ஸௌஹார்தாநுராக மநோஹரலோகநாவாக்யங்களாலே யென்பக்கலநுராகத்தை யாவிஷ்கரித்த ஆஶ்சர்யசேஷ்டிதனானவனென்றபடி. இதுக்குக் கண்ணனென்கிறதோடே அந்வயம். இணைமுலை- அந்யோந்யஸத்ருஶங்கள், இணை- ஸத்ருஶம், ஏகாந்தஸ்தாநாதிகளுக்குமேலே அவகாசமில்லாதபடி அந்யோந்யம் நிரந்தரஸம்ஶ்லிஷ்டங்களாயிச்சேர்த்தியழகைச் சொல்லிச்சொல்லியாற்றாதே ஸம்ஶ்லேஷதசையிலே அவன் வாய்புலற்றிக்கொண்டநுபவிக்கும்படி அஸாதாரணமிகவும் ஶோபநங்களான வென்னுடையஸ்தநங்களானவையென்றபடி. இணைமுலையென்றது- அவன்ஶ்லாகிக்கும்படியைத் தானநுவதித்தபடி. அவனுக்கு நிரதிஶயபோக்யமாகப்பெற்றதென்று ஸ்ரீயானுமின்னுமவனுக் காகவேணுமென்னுமாசையாலும் தான்கொண்டாடுகிறதாகவுமாம். நமுக- தன்னுடைய வக்ஷஸ்ஸ்தலகராதி திவ்யாவயவஸம்ஶ்லேஷ ஸாதிஶயத்தாலே நைஸர்க்கிகமான காடிந்யமும் குலைந்துகுழையும்படி, நமுகுகை- குழைகை, நுண்- ஸூக்ஷ்மமான, இடை- என்னுடையமத்யமானது, நுடங்க- தளரும்படி, நுடங்குகை- தளருகை, ஸாதிஶயத்தாலே ஶ்ரமவஶமாம்படியென்கை. இதுக்குக் கலவிசெய்தென்கிறதோடே அந்வயம். துனி- து:க்கமான, துனி- து:க்கம், தன்னையொருக்ஷணம்பிரியில் அநவதிகது:க்கத்தை விளைக்கும்படியானவென்றபடி. இருங்கலவி- பெரியஸம்ஶ்லேஷத்தை, இரும்- பெரியது, பஹுப்ரகாரமான ஸம்ஶ்லேஷத்தையென்றபடி. செய்து- என்பக்கலிலேசெய்தருளி, ஆகம்தோய்ந்து- என்தேஹத்திலே அவகாஹித்து, ஆகம்- தேஹம்,

மூ—தோய்ந்து துறந்தெம்மையிட்டகல்கண்ணன் கள்வன்* தணியிளஞ்சிங்கமெம்மாயன்வாரான்றாமரைக்கண்ணுஞ்செவ்வாயுநீலப்* பணியிருங்குழல்களுநான்குதோளும்பாவியேன்மனத்தேநின்றீருமாலோ*. ௩.

ஆ—த்ருணத்தைப் பரித்யஜித்தாப்போலே யென்னைப்பரித்யஜித்தகன்ற கண்ணன்வருகிறிலன், அவனுடைய தாமரைக்கண்ணும், செவ்வாயும், நீலப்பணியிருங்குழல்களும், நான்குதோளும், என்னெஞ்சையீராநின்றன, இனியிருந்தென்னுயிர்காக்கைக்குபாயமென்றென் றலற்றுகிறாள். ௩.

இ—விவக்ஷிதம். துறந்தெம்மையித்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஒரு த்ருணத்தையித்யாதியால்) தாமரைக்கண்ணணித்யாதியாலே. பாட்டுக்கு ஸங்கதியும்ஸங்கதிமிகை. கீழ்ப்பாட்டிலே பஹிஃஸ்திதங்களாய் ப்ரகாஶிக்கிற பதார்த்தங்களைச் சொல்லியலற்றினவளிப்பாட்டிலே அவனுடைய திவ்யாவயவஸௌந்தர்யங்கள் ஹ்ருதயஸ்திதங்களாய்நின்று பாதிக்கிறபடியைச்சொல்லி விலபிக்கிறாளென்றுஸங்கதி. ௩.

வ்யா—தோய்க்கை- ஸம்ஶ்லேஷிக்கை, இந்த ஸம்ஶ்லேஷவிஶ்லேஷங்களாலே யென்னைநோக்கி தீர்க்ககாலத்திலே மடுவிலே முழுகிக்கிடப்பாரைப்போலே அத்யந்தாபிநிவேஶத்தாலே யென்னெஞ்சத்திலே ஸம்ஶ்லேஷத்துடனிருந்தென்றபடி. ஸ்வரூபமொழி ஸஜாதீயஸ்வரூபமாய் ஸம்வேத்யஸாக்ஷாத்காரமாய் அதிஶயஸ்வாநுபவ ஸௌந்தர்யங்களால் ஸர்வபூதாக்ஷ்ய ஸௌஶீல்யாதி கல்யாண குணகணங்களாலும் ஸாமர்த்யமானது ஒருமோக்ஷப்ராப்திகையான தன்ஶரீரத்திலே யித்தனைஸம்ஶ்லேஷவிஶ்லேஷங்களைச் செய்தருளப்பெற்றால் அதிற்காட்டில் பாராவஶ்யமில்லாமையாலும் அதையொருக்ஷணமிழந்தால் அதைக்காட்டில் துஃகமில்லாமையாலும் மனதவாய்விட்டுச் சொல்லிச்சொல்லியலற்றுகிறாள். எம்மை- இப்படிஸாவஶ்யனாயிருந்த தன்னைவிட்டுப் பிரியமாட்டாதிருக்கிற நம்மை, ஆத்ருநிவ்ருத்தவநம். துறந்து- த்யஜித்து, ஸம்ஶ்லேஷித்தவஸ்தாநமாம் என்னைவிஶ்லேஷிக்கநினைத்து என்றபடி. இட்டு- எறிந்துவிட்டு, இடுகை- எறிகை, கல்லெறிந்தானென்கிறஸ்தானத்திலே கல்லிட்டானென்னக்கடவதிறே. ஒரு த்ருணத்தையெறியுமாப்போலே நிஷ்ப்ரயமாக வென்னைவிட்டுவிட்டென்றபடி. அகல்கண்ணன்- விஶ்லேஷிக்கையே ஸ்வபாவமானக்ருஷ்ணன், அகலுகை- விஶ்லேஷிக்கை, அகன்றகண்ணனென்னாதே அகல்கண்ணனென்கையாலே அகலுகையே ஸ்வபாவமென்று தோற்றுகிறது. இவனுக்குஸம்ஶ்லேஷம் காதாசித்கம், அகலுகையே நிரந்தரம். ஸம்ஶ்லேஷத்தாலல்லது விஶ்லேஷங்கூடாமையாலே ஸம்ஶ்லேஷித்தானத்தனையென்றுகருத்து. வாரான்- வருகிறானில்லை, தாமரைக்கண்ணும்- விஶ்லேஷிக்கிறபோதென்னை விடமாட்டாதே ஸாபிலாஷமாகக் குளிரப்பார்த்தருளின தாமரஸஸத்ருஶ விலோசனங்களும், செவ்வாயும்- அப்படி பார்த்தருளினவநந்தரம் போய்வருகிறேனென்று சொல்லவுத்யோகித்து வாய்விட்டுச்சொல்லமாட்டாதே விஶ்லேஷஸஹனத்வமில்லாமையாலே துடிபாநின்று அத்தாலேமிகவும் சிவந்துதோற்றின திருவதரமும், நீல- திருமேனியிற்காட்டில் அதிநீலங்களான, பணி- ஶீதளங்களான, அத்யந்தஸுகுமாரங்களானவென்றபடி. இரும்- விஶாலங்களான, ஸம்ஶ்லேஷதஶையிலே விஸ்ருதங்களாய்ப்பின்பு விஶ்லேஷஸமயஸம்ரம்பத்தாலே அங்ஙனே விரிந்திருந்தவைபானவென்றபடி. குழல்களும்- அவனுடைய குந்தளங்களும். நான்குதோளும்- ஆஜாநுலம்பிகளான வக்தலதேஶங்களாலே அலங்க்ருதங்களான நாலுதிருத்தோள்களும், தான்வருந்தனையும் யஶித்திருக்கைக்காக வென்னைநெருக்கியணைத்த நாலுபுஜங்களுமென்றபடி. ஆகாஶவஸ்யாகஸ்ஸஹஜபம் சிரோவஹிதமென்றது மோக்ஷதிஶாபரஷத்தவிஷயம், மோஹிஜநங்களை வாரியணைக்கைக்காக நாலுபுஜங்களுமவர்களுக்குப் ப்ரகாஶிதமாயேயிருக்குமிறே. பாவியேன்- இவ்வழகுகளையநுபவித்திழந்தால் மறந்திருக்கப்பெறுதபடி பாபத்தைப்பண்ணினவென்னுடைய, மனத்தே- ஹ்ருதயத்திலே, நின்று- ஸ்திரமாயிருந்துகொண்டு, அவனென்கண்ணுக்கு விஷயமாகாதொழிந்தாலிவை யென்னெஞ்சுக்கு விஷயமாகாதொழியலாகாதோ, தான்போகிறவனவற்றை யிங்கேவைத்துப் போகவேணுமோ வென்றுகருத்து. ஈரும்- விதாரணம்பண்ணுகின்றது, ஆலோ- கஷ்டம், இனி- எனக்கு ஏகஸஞ்ஜீவநமான வவனுடையஸௌந்தர்யமே உள்ளேநின்று நலியாநின்றபின்பு, இருந்து- ஸந்தேஹப்படியாமலிருந்துகொண்டு, என்னுயிர்- என்ப்ராணனை, காக்குமாறு- ரக்ஷிக்குமுபாயம், ஆருடைய, என்- எது- உபாயமொன்றுங்காணகிறிலேனென்றபடி. ௩.

மூ— யாமுடையாயன்றன்மனங்கல்லாலோவவனுடைத்தீங்குழலீருமாலோ,* யாமுடைத்துணையென்னுந் தோழிமாருமெம்மின் முன்னவனுக்குமாய்வராலோ* யாமுடையாருயிர்காக் குமாறெனவனுடையருள் பெறும்போதரிதே* ||௬||

ஆ—வரக்கடவ ஸமயங்களும் மாலையுமவனையொழியவருவது, ஒருக்ஷணமும் நம்மைப்பிரியில் தரிக்கமாட்டாத ஸ்வபாவனான அவனுடையநெஞ்சானது இப்போது நம்மைப் பிரிந்திருக்கவும்வற்றுவது, அவனுடைய வம்ஶ ஸ்வரமான குழலோசையானது மூர்த்திமத்தாய்நின்றீராநிற்பது, நமக்கு ஸர்வாவஸ்தையிலுந் துணையாகக்கடவ தோழிமாரும் நாமவனைப்பிரிந்துபடுகிற வ்யஸநம்பொறுக்கமாட்டாமை நமக்குமுன்னே தளராநிற்பது அவனுடையக்ருபைபெறுகை நமக்கரிதாவது, இனியெங்ஙனே நம்முயிரைக் காக்கும்படியென்கிறாள். ||௬||

இ—யாமுடையாயனென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஒருக்ஷணமித்யாதியால்) மனங்கல்லாலோவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நெஞ்சானதித்யாதியால்) வற்றுவதென்றது- ஸ்தப்தமாவதென்றபடி. த்ருதீயபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நமக்குஸர்வாவஸ்தையிலுமித்யாதியால்) தளராநிற்பதென்றது- ஶோகத்தாலே க்ருஶைகளாகாநிற்பதென்றபடி. ஶேஷம்ஸ்பஷ்டம். ஒழிவது வருவது வற்றுவது இத்யாதியானவையெல்லாம் ஸாவதாரணங்கள். இனியித்யாதியாலே கீழ்ப்பாட்டிலே ஸம்ஶ்லேஷிகளான சிலவஸ்துக்கள் ப்ரதிகூலங்களாம்படியைச் சொன்னவளிப்பாட்டிலே ஜீவநஹேதுக்களான ஸகலபதார்த்தங்களும் ஸ்வஸ்வபாவங்களைவிட்டு அந்யதாபாவமானபின் யெங்ஙனே நான்ஜீவிக்கும்படி யென்கிறாளென்று ஸங்கதியும் ஸூசிதமாயிற்று. ||௬||

ஈ—க்ரீடைபண்ணி யொருக்ஷணமாகிலும் விஶ்லேஷித்தாலாகாதோவென்றபடி, யாமுடை- நம்முடையவனை நம்மைப்பிரியில் தரிக்கமாட்டாதபடி நமக்கு ஸர்வஸ்வபூதனானவென்றபடி. ஆயன்தன்மனம்- கோபாலனுடைய ஹ்ருதயமானது, தன்னென்று ஸ்வாபதேஶம். கல்- வஜ்ரக்கல்லாய்விட்டது, நம்மைப்பிரிந்தும் த்ருடமாய் உத்தீபகவஸ்துக்களாலும் கரையாதிருக்கக்கற்றதென்றபடி. இல்லையாகில் விஶ்லேஷவ்யதையைக்கண்டாலவனென்னைப்போலே நீராயுருகிப்பதறிக்கொண்டுவந்து கிட்டானோவென்றுகருத்து. ஆலோ- அய்யய்யோ! ஸுஸ்நிக்த கோமளமான நெஞ்சு வஜ்ராதிககடோரமாய்முடிவதே, கல்லைப்பெண்ணாக்கினவன் நெஞ்சுகல்லானால் அதைத்ரவீகரிக்க வல்லாரில்லையேயென்றபடி. அவனுடை- அந்தகோபாலனுடைய, தீங்குழல்- மதுரமான வேணுவானது, தீம்என்று மாதுர்யம், கர்ணாம்ருதமான வேணுநாதமானதென்றபடி. பகலெல்லாமுன்னுடைய சேஷ்டிதங்களைக்காணாதே நான்வருகிறப்போலே தாபதப்தையானேன், இத்தனைபோது விஶ்லேஷிக்கையாலேயுன்னுடைய ஸம்ஶ்லேஷஸௌபாக்யத்தையு மிழக்கப்புகுகிறேனோவென்றஞ்சாநின்றேன், வித்யாதிகம்ப்ரத்யையாலே ஸ்துதிதாநாதிக்ந ஸுஹ்ருத்விஹீநனான வென்பக்கலிலே ஸாரஹ்ருதயனாய்நீ க்ரீடைபண்ணவேணுமென்றாப்போலே சிலப்ரகாரங்களைச் சூதிக்கொண்டு வருகையாலே யெனக்கு கர்ணாம்ருதமாயிருந்துள்ள வேணுநாதமானதென்கை. ஈரும்- தேஹத்தை விதாரணம்பண்ணாநின்றது, ப்ரதிஸாயமவனூதிக்கொண்டுவரும் வேணுத்வனியானது இப்போது ஸ்ரூதிவிஷயமாய்க்கொண்டு வதிக்கின்றதென்றபடி. ஆலோ- அய்யய்யோ! நாம் நைராஶ்யத்தைஸஹிக்கும்படி யவன்மனம்கல்லென்று நிஶ்சயிக்கவும்வொட்டுகிறதில்லையே யிதுவென்றபடி. யாமுடை- நம்முடைய, துணையென்னும்- ஆபத்தில் ஸஹாயமென்று தாங்களே அபிமானித்துக்கொண்டிருக்குமவர்களான, தோழிமாரும்- ஸகிகளும், அவனுக்கு- அவன்பொருட்டு, இவளுக்கவன்வரவேணுமென்றே தத்பரைகளாகவென்றபடி. எம்மின்முன்- அவனைப்பிரிந்து வ்யதிதமாகிற நமக்குமுன்னே, மாய்வர்- முடியாநின்றார்கள், மாய்கை- முடிகை, அதிஶயித ஶோகவேகத்தால் ம்ருதப்ராயராகாநின்றார்களென்றபடி. ஆலோ- அய்யய்யோ! நெஞ்சுந்துணையன்றிக்கே யவனுமுதவாதபோதும் துணையாகக்கடவவிவர்களுந் துணையாகமாட்டாதொழிவதே யென்றபடி. அவனுடையருள்- அவனுடையக்ருபையை, பெறும்போது- நாமடையும்தஶை, அரிது- அரிதாயிராநின்றது, துர்லபமாயிராநின்றதென்றபடி. யாமுடை- அநந்யகதிகளானநம்முடைய, ஆருயிர்- ப்ராணபூதமான வுயிரை, ஆத்மாவையென்றபடி. காக்குமாறு- முடியாதபடி ரக்ஷிக்கும்ப்ரகாரம், ஆறு- ப்ரகாரம், என்- ஏதும், ஒன்றுங் காண்கிறிலேனென்றபடி. ||௬||

